# நூற்றாண்டு விழா
# 1907 - 2007



C. நடராஜ முதலியார் BA., BL.,



கௌரி அம்மாள்

2008

16102.
A. No. 1602
Q 1:457



C. நடராஜ முதலியார் B.A., B.L.,
1907 - 1984

சி.நடராஜ முதலியார் தாய் - தந்தை



எஸ். கே. சின்ன குழந்தை முதலியார் 1875 - 1968
சி. கல்யாணிஅம்மாள் 1884-1947



தமிழக முன்னாள் முதல்வர் மாண்புமிகு C.N. அண்ணாதுரையுன் C. நடராஜ முதலியார்



முன்னாள் இந்திய ஜனாதிபதி R. வெங்கடராமன்
மற்றும் செங்குந்த குல தலைவர் பத்மஸ்ரீ
நாச்சி முத்து ஆகியோருடன் C.நடராஜ முதலியார்



சமுதாய ஒற்றுமைக்கு வித்திட்ட தலைவர்
வள்ளல் T.N. சபாபதி முதலியார்



சமுதாய எழுச்சிக்கு வித்திட்ட தலைவர்
பத்மஸ்ரீ M.P. நாச்சி முத்து



புரட்சிக் கவிஞர்
பாரதிதாசன்



இளைய சமுதாய எழுச்சிக்கு வித்திட்டவர்
உத்தியோக ரத்னா தலைவர் ஜெ.சுத்தாநந்தன்

ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை முத்து விழா - திரு. வி. க. நூற்றண்டு விழா 05-08-1983



அமர்த்திருப்பவர்கள் : 1. சி. நடராஜ முதலியார், 2. டாக்டர் ந.மகா லிங்கம், 3. மாண்புமிகு அறநிலை, செய்தி துறை அமைச்சர் ஆர். எம். வீரப்பன், 4. டாக்டர். ம.பொ. சிவஞானம், 5. டாக்டர் அவ்வை நடராஜன், 6. சிறுவை மோகன சுந்தரம்.
நின்றிருப்பவர்கள் : 1.டாக்டர் அ. நாகலிங்கம், 2. அம்பை சங்கரனர், 3. கஜமுமலை, 4. பி.ஜி.சினிவாச ராவ், 5. சி. ந. சிவகுமார், 6. ர. திருஞான சம்பந்தன் 7. நே. த. கிருஷ்ணசாமி, 8. டி. நாராயணசாமி, 9. சி.வா. கிருஷ்ணமூர்த்தி



12-11-1977 தனது 70 ஆம் ஆண்டு நிறைவாக C. நடராஜ முதலியார்
தன் தமக்கை விசாலாட்சி அம்மாள் மற்றும் மகன்கள், மருமகள்கள், பேரன்கள், பெயர்த்திகளுடன்



முன்னாள் குஜரத் மாநில ஆளுநரும் உயர் நீதி மன்ற தலைமை நீதிபதியுமான
திரு.பி. ஆர். கோகுல கிருஷ்ணன் அவர்கள் சி. நடராஜ முதலியாருக்கு பொன்னாடை
போர்த்தி கௌரவிக்கின்றார்

5-1

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்க முன்னாள் துணைத் தலைவர் 'நன்மனச்செம்மல்' சி. நடராஜ முதலியார் - கௌரி அம்மாள் நூற்றாண்டு விழா

(1907 - 2007)



தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்
(நிறுவியது 1923)
எண். 58 (பழைய எண். 89) அரண்மனைக்காரன் தெரு,
சென்னை - 600 001.
2008

## தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

(நிறுவியது 1923)

எண். 58 (பழைய எண். 89) அரண்மனைக்காரன் தெரு,
சென்னை - 600 001.

சங்கத்துணைத் தலைவர் நன்மனச் செம்மல்

**சி. நடராஜ முதலியார் நூற்றாண்டு விழா**

செங்குந்தர் குல நலிந்தோர் மேம்பாட்டுக் கல்வி நிதி அறக்கட்டளைக்கு முதல் தவணையாக ரூபாய் இரண்டு லட்சம் நன்கொடை.

வள்ளல் சபாபதி மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி நெம்பர். 25, ஆரிங்டன் சாலை, நுங்கம்பாக்கம், சென்னை-600 034 பள்ளியில் பயிலும் பிளஸ் 2 மாணவர்களுள் முதல் மதிப்பெண் பெற்றவருக்கு 'நன்மனச் செம்மல்' சி. நடராஜ முதலியார் நூற்றாண்டு விழா நினைவாக சுழற் கேடயம் வழங்க நிறுவப்பட்டது.

5-1

# முன்னுரை

"மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்; வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதும் ஓர் குறைவு இலை."

என்ற திருஞானசம்பந்தர் பாடலுக்கேற்ப வாழ்ந்து காட்டிய பெருமகனார் அமரர் சி. நடராஜ முதலியார் - கௌரி அம்மாள் தம்பதியர். தனி மனிதன் உயர வீடு உயரும். வீடு உயர நாடு உயரும். நாடு உயர உலகம் உயரும். அதற்குத் தனி மனித வளர்ச்சி, சமுதாய உணர்ச்சி, நாட்டுப்பற்று மிக மிக முக்கியம். நேற்றைய - இன்றைய - நாளைய கால வளர்ச்சிக்கேற்ப வளர்ச்சியுற அவர்களை நினைத்து வழி நடந்து முன்னேற வேண்டும். அத்தகைய வகையில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் முன்னோடியாகத் திகழ்கிறது. நூற்றாண்டு விழா எடுக்க உதவி புரிந்த அத்தனை பேருக்கும் எம் நெஞ்சார்ந்த நன்றி. இப்புத்தகத்தைக் குறித்த காலத்தில் பொலிவுடன் அச்சிட்டு வெளிக்கொணர்ந்த சென்னை, இராயப்பேட்டையில் உள்ள அலமு பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு. துரை. இராமநாதன் மற்றும் ஊழியர் களுக்கும் இறைவன் திருவருள் பெருக வேண்டுகிறோம். இந்நூலைப் படிக்கும் அன்பர்களைக் குறைகளை நீக்கி நிறைகளைப் போற்ற வேண்டுகிறோம்.

நன்றி; வணக்கம்.

இவ்வண்ணம்
அமரர் சி. நடராஜ முதலியார் - கௌரி அம்மாள்
குடும்பத்தினர்.

# நன் மனச் செம்மல் - சி. நடராஜ முதலியார்

செங்குந்த குல பிரமுகராக விளங்கிய காஞ்சிபுரம் சின்னகுழந்தை முதலியார் - கல்யாணி அம்மாள் ஆகியோருக்கு மூன்றாவது மகனாக 03-11-1907ல் சி. நடராஜ முதலியார் பிறந்தார். இவர் காஞ்சிபுரத்தில் நம் குல முதல் பட்டதாரியாவர். திருகாளத்தீஸ்வரரை குல தெய்வமாகவும், முருகப் பெருமானை இஷ்ட தெய்வமாகவும் துதித்து அருள் பெற்றவர். 1928ஆம் ஆண்டு B.A. பட்டம் பெற்றார். பேரறிஞர் அண்ணா உடன் படித்தவர். சில காலம் பச்சையப்பன் கல்லூரியில் ஆசிரியர் பணி செய்து வந்தார். 1931ல் காஞ்சிபுரத்தில் நடந்த தென்னிந்திய செங்குந்தர் மாநாட்டில் கலந்து கொண்ட நீதிபதி எஸ்.பி. ஸ்ரீராம் தம் தந்தை என்ஜினீயர் எஸ்.பி. அய்யாசாமி அவர்களுக்கு எடுத்துக் கூறித் தம் தங்கை கௌரி அம்மையாரை சட்டக் கல்லூரி படித்துக் கொண்டிருந்த சி. நடராஜ முதலியார்க்கு திருமணம் செய்து வைத்தார். பின்பு 1932ல் செங்குந்த குல முதல் வழக்கறிஞராக பதிவு செய்து மகாத்மா காந்தியின் வழக்கறிஞர் கே பாஷ்யம் என்பவரிடம் பணியாற்றத் தொடங்கினார். இவரது மகன்கள் 1) சி.என். விஸ்வநாதன் M.A.B.L., DSS, 2) Dr. சி.என். சொக்கநாதன் MBBS, 3) சி.என். சிவகுமார் BABL, 4) அமரர் சி.என்.நமசிவாயன் D.E.E. 5) Dr. சி.என். ரவீந்திரன் M.D.,

சி.நடராஜ முதலியார் மனைவி கௌரி அம்மாள், சென்னையில் S.P.அய்யாசாமி-இராஜம்பாள் அம்மை யாருக்கு 19.10.1914ல் பிறந்தார். மெட்ராஸ் மியூசிக் ஸ்கூலில் வீணை, புல்லாங்குழல், வாய்ப்பாட்டு ஆகியவற்றில் தேர்ச்சி பெற்றவர். அவர் தலைமையில்

09.09.1947ல் மாயவரத்தில் தென்னிந்திய செங்குந்தர் இரண்டாவது மாதர் மாநாடு நடந்தது. அவர் 07.12.1965ல் இயற்கை எய்தினார்

நம் குல பெருமக்களால் அன்புடன் சி.என். (CN) என்று அழைக்கப்பட்ட சி. நடராஜ முதலியார் 1937ல் சென்னை திருவல்லிக்கேணி செங்குந்தர் சங்க செயற்குழு உறுப்பினரானார். 29.04.1927 அன்று சென்னையில் B.V. நடராஜ முதலியார் தலைமையில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் தோற்றுவிக்கப்பட்டது. அது சமுதாய மக்கள் ஜில்லா தோறும் ஒன்று சேர வழி வகுத்தது.

சி. என். சமுதாயப் பெருந்தொண்டராக இருந்து அரும்பாடு பட்டவர். காஞ்சிபுரத்தில் 1937ல் நடந்த இரண்டாவது தென்னிந்திய செங்குந்தர் மாநாட்டு இளைஞர் அணி செயலாளராக சேவை செய்தார். 05.06.1944 அன்று நடந்த கூரை நாடு மாநாட்டில் செயலாளராக சிறப்புடன் பணியாற்றினார். 17.3.1945ல் ஈரோட்டில் பேராசிரியர் S. மீனாட்சி சுந்தரனார் தலைமையில் நடந்த முதல் ஜில்லா மாநாட்டில் C. நடராஜ முதலியாருக்கு **'நன்மனச் சான்றோர்'** என்ற பட்டம் வழங்கப்பட்டது. சுமார் 30 ஆண்டுகளாக 1960 ஆண்டு வரை சங்கத்தின் செயலாளராகவும் 'செங்குந்த மித்திரன்' மாத இதழின் கௌரவ ஆசிரியராகவும் சேவை செய்தார். மதராஸ் பளையகாட் கம்பெனி உதவியுடன் சென்னை அரண்மனைக்கார தெருவில் 'செங்குந்தர் மாளிகையை' தோற்றுவிக்க பெரிதும் பாடுபட்டவர். நெசவாளர்கள் மேம்படவும் செங்குந்தர் கல்வி நிதியை வளரவும் செய்தவர். 1940ல் நமது சமுதாயத்தை பிற்படுத்தப் பட்டோர் பட்டியலிருந்து நீக்கியபோது மீண்டும் இடம் பெறக் கடும் முயற்சியை மேற்கொண்டவர். பத்மஸ்ரீ M.P. நாச்சிமுத்துவின் தோழராக இறுதி வரை நம் குல

மக்களுக்கு பெருந்தொண்டாற்றியவர். மதராஸ் கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்க (Co-optex) வழக்கறிஞராக பணி ஆற்றியவர், பத்மஸ்ரீ MPN தலைமையில் தான் பிறந்த காஞ்சிபுரத்தில் 04.02.1984 அன்று நடந்த மாநாட்டின் துணைத்தலைவராகச் செயலாற்றி சிறப்புடன் நடத்தி காட்டினார்.

சுமார் 50 ஆண்டு காலமாக செங்குந்த குல சமுதாயத்திற்கு அருந்தொண்டாற்றியவர். ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை தலைவராக 1971 முதல் 1984-வரை செயல் புரிந்தபோது சபையின் முத்துவிழா, திரு.வி.க. நூற்றாண்டு விழா 05.08.1983 அன்று கொண்டாப்பட்டன. ஸ்ரீ சிவ சுப்ரமணிய பக்த ஜன சபைத் தலைவராகவும், திருவல்லிக்கேணி ஸ்ரீ நடராஜா கல்விக் கழகம், புளுமவுண்டன் சிட் பண்டு, சைதை நிலவள வங்கி சட்ட ஆலோசகராகவும், சைதாப்பேட்டை அன்னபூரணி அம்மாள் பள்ளியின் நிர்வாகியாகவும் சிறப்புடன் செயலாற்றினார். 1983ஆம் ஆண்டு நம் குல குரு திருமுருக கிருபாநந்தவாரியார் நம் கரும வீரர் சி. நடராஜமுதலியார் இருவரும் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் தாளாளராக (PATRON) கௌரவிக்கப் பட்டனர். சி.என்னின் வாழ்க்கை நெறி முறைகளை பின்பற்றினால் வெற்றி நிச்சயம். யாவருக்கும் அவர் ஆற்றிய அறிவுரைகள் பல. செயல்படும்போது நுனிப்புல்லை மேயக் கூடாது 'ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே' என்ற மாணிக்கவாசகர் வாக்கின்படி அறிவு கூர்ந்து எந்த செயலையும் பரந்த நோக்குடன் முழுமனதுடன் செயல்பட வேண்டும் என்று அடிக்கடி கூறுவார். பிள்ளைகளை வளர்க்கும்போது கண்டிக்கலாமே தவிர அடித்து வளர்க்கக் கூடாது. திருமணத்தில் வரதட்சணை தவிர்க்க வேண்டும். பெண் கல்வி மூலம்

சமுதாயம் மேம்பட வேண்டும் என்று அடிக்கடி சொல்லுவார். குடும்பத்தில் பாசமுடன் விளங்க வேண்டும். சமுதாயத்தில் ஒற்றுமையுடன் சேர்ந்து வாழ வேண்டும். கடவுள் பக்தி வேண்டும். ஆனால் ஆக்ரோஷமான பக்தி அவசியமில்லை என்று போதிப்பார். வாழ்க்கையில் படிப்படியாக முன்னேற வேண்டுமே தவிர அதிக பேராசை கொண்டு அவசர புத்தியுடன் மேலே செல்ல ஆசைப்படக்கூடாது. மனிதன் கண்டிப்புடன் அதே சமயம் மென்மையான இதயமுள்ளவனாக இருத்தல் வேண்டும் என்று செயல்பட்டவர். அரை வயிறு உண்ண வேண்டும். முடியும் வரை உடற்பயிற்சி செய்ய வேண்டும் என்ற நெறியைக் கடைபிடித்தவர். தம் 77ஆம் வயதில் 18.04.1984 அன்று இயற்கை எய்தினார்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த அன்னாரது வாழ்க்கை நம் குல இளைய சமுதாயத்திற்கு எழுச்சி ஊட்டும் வகையில் எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

வாழ்க செங்குந்தர் சமுதாயம்! ஓங்குக நூற்றாண்டு விழாக் காணும் C. நடராஜ முதலியார் புகழ்!

❊ ❊ ❊

அன்னாரது சட்ட நுண்ணறிவாற்றலால் பயன் அடைந்தவர் பலர். அவர் வாங்கிய பீஸ் மிக மிக சொற்பம். இன்று கட்டிடத்திற்கு உரிமையாளச் சங்கம் இருக்கிறது என்றால் அதற்கு அவர் பங்கு அதிகம். தொழில் வளம் பாதிக்காத வகையில் சமூகத் தொண்டினைச் செய்து சமுதாய வளர்ச்சிக்கு பாடுபட்டவர்.

நீதி அரசர் திரு. எஸ். ஜகதீசன்

சான்றோரை மதிப்பவர். எளிய முறையில் இனிமையாக பழகுபவர். தன்னலமற்ற சமுதாயத் தொண்டர். சிறந்த வழக்கறிஞர். நேர்மையுள்ள நிர்வாகி.

திரு. ஆர். சண்முகம் ஐஏஎஸ்

நம் சமுதாயத்தினரிடையே புகழ் பெற்றவர். என் வாழ்க்கையின முன்னேற்றத்திற்கு பெருந் துணையாக விளங்கியவர். இல்லறத்தை நல்லறமாக பேணி உயர் கல்வியிலும் சிறந்து விளங்கிய நன்மக்களைப் பெற்றவர்.

திரு. பொ.க.சாமிநாதன் முன்னாள் தலைவர்
சமுதாய பொருளாதார தொண்டு மன்றம்

பத்மஸ்ரீ நாச்சிமுத்து அவர்களின் ஆருயிர் தோழர். சமுதாய தொண்டுள்ளம் கொண்டவர். சங்க சொத்துக்கள் வாங்க பெரிதும் துணை நின்றவர். பல ஆண்டு செங்குந்த மித்திரன் கௌரவ ஆசிரியராகப் பணிபுரிந்தவர்.

J. உத்தியோக ரத்னா
திரு. J. சுத்தானந்தன்
தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜனசங்கம்

கடுமையான தோற்றம். ஆனால் மென்மையான உள்ளம் கொண்ட மாமனிதர். எப்போதாகிலும் சர்தார் வல்லபாய் பட்டேல் போல சிரிப்பார். தி மதறாஸ் பளைய காட் கம்பெனியின் சட்ட ஆலோசகராகவும், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தை தோற்றுவித்த திருவாரூர்

வள்ளல் T.N. சபாபதி முதலியார் இவரிடம் மிகுந்த மரியாதை கொண்டவர். தவறு செய்பவர் யாராயிருந்தாலும் தட்டிக் கேட்பவர். பத்மஸ்ரீ எம்.பி.என். அவர்களின் உயிர் தோழன்.

'தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப்படும்'

என்ற வள்ளுவனின் குறளுக்கு இவர் குடும்பமே சாட்சி

திரு.ஆர். பிச்சை பிஏபிஎல்.

தென்னிந்திய மகாஜன சங்கத்தின் மதிப்புறு செயலாளராக 25 ஆண்டுகள் சிறப்புடன் விளங்கியவர். செங்குந்த மித்திரன் கௌரவ ஆசிரியராக பணியாற்றியவர். பின்பு துணைத் தலைவராக மாநாடு பல சிறப்பித்தவர். திருமுருக கிருபாநந்தவாரியாரும் திரு. நடராஜ முதலியாரும் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம் காப்பாளராக நியமிக்கப்பட்டனர்.

திரு.எம்.பி. பாண்டுரங்கம்
தலைவர் சமுதாய பொருளாதார தொண்டு மன்றம்

நூற்றாண்டு விழா காணும் அமரர் சி. நடராஜ முதலியார் பழகுவதற்கு இனிமையானவர். சமுதாயப் பணியில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். தென்னிந்திய மகா ஜன சங்க வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டவர். நம் சமுதாயத்தை தோற்றுவித்த வள்ளல் தி.ந. சபாபதி முதலியாரின் ஆலோசகர். பத்மஸ்ரீ M.P. நாச்சிமுத்து முதலியாரின் ஆருயிர் தோழர்.

திரு.ரங்கைய்யா
பொருளாளர் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

அமரர் நடராஜ முதலியார் அவர்கள் கண்ணியம்மிக்கவர். எளிமையானவர். சட்டம் விதி ஆகியவற்றைக் காட்டிலும் நேர்மை நியாயம் போன்றவற்றை பெரிதும் மதிப்பவர்.

நீதி அரசர் T.N. சிங்காரவேலு

# அன்று முதல் இன்று வரை

சி. நடராஜ முதலியார் (1907 - 1984)

கௌரி அம்மாள் (1914 - 1965)





திரு. சி. ந. விஸ்வநாதன் குடும்பத்தினர்



திரு. சி. ந. சொக்கநாதன் குடும்பத்தினர்



திரு. சி. ந. சிவகுமார் குடும்பத்தினர்



திரு. சி. ந. ரவீந்திரன் குடும்பத்தினர்

## சீர்த்திமிகு. செங்குந்த குலச் செம்மல்

### திருமுருக கிருபானந்தவாரியார் (1906 - 1993)

உலகளாவிய புகழ் :

உலகெங்குமுள்ள தமிழக மக்கள் அனைவரும் திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளை நன்கறிவர். தமிழகத்தின் சிற்றூர் பேரூர்களிலும், பட்டி தொட்டிகளிலும் அவருடைய வெண்கலக்குரல் கடந்த ஐம்பதாண்டுகட்கும் மேலாக ஒலித்து வருகின்றது. இந்தியாவின் மற்ற மாநிலங்களிலும், ஈழநாட்டிலும், மலேயா சிங்கப்பூர் பர்மா ஆப்பிரிக்கா அமெரிக்கா இங்கிலாந்து பிரான்சு முதலிய வெளிநாடுகளிலும் அவருடைய இன்னிசை விரிவுரைகள் நடந்துள்ளன. "எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்" என்று வடலூர் வள்ளலார் வேண்டியுள்ளது போல, நம் வாரியார் சுவாமிகள் உலகெங்கும் சென்று இறைவன் அருட்புகழை இயம்பினார். அவருடைய அரிய பெரிய சுவைமிக்க உரைகளைக் கேட்டு எண்ணற்ற மக்கள் மகிழ்ந்து வருவதோடு, தம் வாழ்வில் அருளுணர்வும், ஒழுக்கமும், திருத்தமும் எய்தி உயர்வடைந்து வருகின்றனர்.

போற்றுதலுக்குரிய நம் வாரியார் பராபவ ஆண்டு ஆவணித்திங்கள் 9ஆம் நாள் (25-8-1906) வேலூரை அடுத்துள்ள காங்கேயநல்லூரில் சிவத்திரு. மல்லையதாஸ் பாகவதர் அவர்கட்கும் திருமதி. கனகவல்லி அம்மைக்கும் பிறந்தார். இவருடன் பிறந்தோர் மதுசூதன சிவம், திருமாமணாளசிவம், திருப்புகழ்மணி என்பவர்கள். பரம்பரையர்க அனைவருமே இன்னிசை விரிவுரைகள் (கதா கலாட்சேபங்கள்) செய்யும் ஆற்றல் பெற்றவர்கள். வாரியாருக்கு அவர் தந்தையே மூன்று வயது முதல்

எழுத்தறிவித்து, இளமையிலேயே இலக்கண, இலக்கியங்களிற் தேர்ச்சி பெறச் செய்ததோடு, இசைக்கலையிலும் பயிற்சி அளித்து இன்னிசை விரிவுரைகளை நிகழ்த்துமாறு செய்தார். 12 வயதிலேயே, பதினாயிரம் அருட் பாடல்கள் மனப்பாடம் ஆயின. முறையாகப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து பயிலாத நம் வாரியார் சுவாமிகள் "நடமாடும் பல்கலைக் கழகம்" என்னும்படி விளங்குகின்றார். பல்வேறு பல்கலைக் கழகங்களிலும் அவ்வப்போது இவரை விரிவுரை செய்யுமாறு அழைத்துப் பேராசிரியர்களும், மாணவர்களும் கேட்டு மகிழ்ந்தனர். தம்முடைய 13வது வயதில் ஆனைகவுனியில் வசித்த திரு. வரதாச்சாரியாரிடம், சிந்தாதிரிப்பேட்டையிலிருந்து நடந்து சென்று நாடோறும் வீணைப்பயிற்சி பெற்றுக் கொண்டார். வீணையைச் சுமந்து கொண்டு கடற்கரைக்குச் சென்று சாதனை செய்வார்.

'கிருபானந்தவாரி' என்ற பெயருடன் விளங்கும் இவருக்கு 12 வயதிலேயே தீக்கை செய்து 'வாமதேவசிவம்' என்ற தீட்சாநாமம் சூட்டப்பட்டது. அக்கால வழக்கப்படி 19 வயதிலேயே திரு. அமிர்தவல்லி அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார். 1936ஆம் ஆண்டு வயலூர் முருகப்பெருமானை தேவியருடன் எழுந்தருளச் செய்து 'ஆத்மார்த்த' பூசை மேற்கொண்டார். அதுமுதல் எந்நேரமாயினும் பூசை முடித்தே உணவு கொள்ளும் நியமத்தைக் கடைப்பிடித்து வந்தார்.

**உருவான பணிகள் :**

வாரியார் சுவாமிகள், ஈடும் எடுப்புமற்ற இன்னிசை விரிவுரைகளையாற்றி, மக்கள் மகிழ்ச்சியும் ஊக்கமும் ஒழுக்கமும் பெறச் செய்வதோடு, எத்தனையோ பல உருவான நிலையான திருப்பணிகளையும்

நிறைவேற்றினார். ஊக்கமிக்க ஏழை எளிய மக்கள் பலர் சிறந்த கல்வி நலம் பெறுவதற்கும் உதவி செய்தார். எத்தனையோ அருள்நெறி விளக்க நூல்களை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார்கள். "திருப்புகழமிர்தம்" எனும் திங்கள் வெளியீட்டின் மூலம் அவர்கள் ஆற்றியுள்ள தெய்வீக இலக்கியப் பணிகள் ஏராளம்! ஏராளம்!

**வழிபடு தெய்வம் :**

பொதுவாக இறையுணர்வையும், சிறப்பாகச் சைவ சமயத் தெளிவையும் ஊட்டி வந்தாலும், குறிப்பாகத் தாம் பிறந்த செங்குந்த மரபினரின் குலதெய்வமாகிய முருகப் பெருமானின் புகழை வெகுவாகப் பரப்பி அவரையே தம் வழிபடுமூர்த்தியாக (உபாசனா மூர்த்தியாக) கொண்டுள்ளமையால் அவர் பெயருக்கு முன்னால் 'திருமுருக' என்னும் அடைமொழி இடம் பெற்றுவிட்டது.

**திருப்பணி செய்த திருவூர்கள் :**

தாம் பிறந்த ஊராகிய காங்கேயநல்லூரிலும், திருச்சியை அடுத்துள்ள வயலூரிலும், சிறப்பாக வடலூரிலும், மற்றும் சமயபுரம், அவிநாசி, ஈரோடு, காஞ்சிபுரம், சென்னை குயப்பேட்டை, வள்ளிமலை முதலிய பல இடங்களிலும் அவர்கள் தனி ஒருவராக முயன்று செய்துள்ள திருக்கோயிற்றிருப்பணிகளும், காங்கேயநல்லூரிலும், திருப்பராய்த்துறை இராமகிருஷ்ண குடிலுக்கும் அவர்கள் கல்விப் பணிக்காகச் செய்துள்ள ஏராளமான பணிகள் என்றும் நிலையாக இருக்கக் கூடியன.

**கடவுட் கொடை :**

வாரியாருடைய சொற்பொழிவு இசையோடு கூடியது; நகைச்சுவைமிக்கது; ஆழ்ந்த பல அரிய பெரிய கருத்துக்களை எளிமையாக விளக்கி எல்லோருடைய

மனத்திலும் பதிய வைக்கக் கூடியது; மக்கள் தம் வாழ்வில் பெற வேண்டிய திருத்தங்களைப் பெற்று உயருமாறு செய்யும் ஆற்றலுடையது; இலக்கிய நயங்களைச் சுவையுடன் வாரி வாரி வழங்குவது; மக்களைச் சிரிக்க வைப்பதைப் போலவே உள்ளம் கசிந்து உருகி அழும்படியும் செய்யக் கூடியது; எவர் மனமும் புண்படாதவகையில் இடித்தும் புகழ்ந்தும் மக்களைத் திருத்தி ஏற்றமுறச் செய்வது; இது அவருக்கென்றே அமைந்த தனிப்பாணியாக; அருட்கொடையாக இருப்பது;

> "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
> வேட்ப மொழிவதாம் சொல்"

என்னும் திருக்குறள் மொழிக்கு முழுதும் ஒத்ததாக விளங்குவது. பொதுமக்கள் மட்டுமின்றி, கற்றாரும் கலைஞரும் வியந்து போற்றும் வகையில் எண்ணற்ற பாடல்களையும் கிளைக் கதைகளையும் சுவைபடக் கடல் மடை திறந்ததுபோல் பொங்கி வழியச் செய்வது; தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைகளையும் சிறப்பாகத் திருப்புகழ் அருணகிரிநாதர் பாடல்களையும், வள்ளலார் அருட்பாக்களையும் மற்றும் பல பிரபந்தப் பாடல்களையும் புராணக் கவிதைகளையும், தனிப் பாடல்களையும் சற்றும் தயக்கமின்றிப் புதைவாணமென எடுத்துக் கூறித் தெய்வ மணங்கமழச் செய்யும். நேரமும் சூழலும் மறந்து ஆயிரக்கணக்கான மக்கள் அங்காந்து மகிழ்ந்து ஈடுபடும்படி செய்யக் கூடியது. எந்த ஒரு குறிப்பும் நூலும் எதிரில் இல்லாமலே ஏதோ ஒரு விசையை முடுக்கி விட்டது போல அடுக்கடுக்கான சுவைகளுடன் ஆற்று நீர் பூரித்துப் பெருகிப் பாய்ந்து பல்வேறு நடையிற் பயின்று வருவது போல இசை நுணுக்கங்களுடன் இயல்வது; இஃதோர் கடவுட் கொடை (god's gift) என்று இவர்தம் சொற்பொழிவின் சிறப்பை முடிப்பதே சரியாகும்.

**அரிய இயல்பும் பழக்கங்களும் :**

இனி, வாரியார் சுவாமிகளின் அரிய சில பழக்கவழக்கங்களைப் பற்றியேனும் எண்ணிப் பார்ப்பது எல்லோருக்கும் நல்லது. எந்நேரமாயினும் நாடோறும் வழிபாடு செய்யாமல் - முருகப் பெருமானைப் பூசிக்காமல் - உண்பதில்லை. தமக்கு வரும் கடிதங்கள் எல்லாவற்றுக்கும், அவற்றை யார் எழுதியிருந்தாலும் உடனுக்குடன் பெரும்பாலும் தம் திருக்கரத்தாலேயே விடை எழுதுவார். நாடறிந்த அவருக்கு திருமண அழைப்பு போன்றவை எல்லாவற்றுக்கும் வெண்பா யாப்பில் தவறாமல் வாழ்த்துப்பா எழுதியனுப்புவார். காட்சிக்கு எளியவராய் இன்னார் இனியார், ஏழை செல்வர் என்று கருதாமல் எல்லோரிடமும் கலந்துரையாடி இனிது பழகுவார். உதவி என்று வருகிறவர்கள் யாராயினும் இயன்ற உதவிகளை இன்முகத்தோடு செய்வார். இயலாதாயின் தம் நிலையை இனிது விளக்கி ஆறுதல் சொல்லி அனுப்பி வைப்பார். பரிவுரை (சிபாரிசு) நாடி வருபவர்கள் யாராயிருப்பினும், எவருக்காயினும் மறுக்காமல் தயங்காமல் தம்கைப்படக் கடிதம் எழுதிக் கொடுத்து நலம் செய்வார். அவரால் வேலை பெற்றோர், கல்விக் கூடங்களில் இடம் பெற்றோர் எண்ணிறந்தோராவர். “செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்” என்றபடி தம் உற்றார் உறவினர் நண்பர்கள் பலருக்கும் பேராதரவு செய்து வருவது அவருடைய இயல்பாகும். நாடோறும் பல்வேறு இடங்களுக்குச் செல்லும் நிலையில் இருந்தும், ஆங்காங்கு உள்ளவர்கள் “வாரியார் தமக்கே உரியவர்! தம்மிடமே மிக்க அன்புரிமை பாராட்டுபவர்”, என்று கருதி மகிழும்படி கலந்து பழகுவார். எல்லோரையும் அவரவரிடமுள்ள நலங்களைச் சொல்லிக் கஞ்சத்தனமோ வஞ்சமோ இன்றித் தனித்தும் கூட்டத்திலும்

“பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமை நோற்பதொன் றுண்டு - பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங் காத்து
யார் யார்க்கும் தாழ்ச்சி சொலல்”,

என்னும் முதுமொழிக்கேற்ப வாயார மனமாரப் புகழ்ந்து போற்றி மகிழ்வார். கற்றவர்கள் சொற்பொழி வாற்றுபவர்களை ஊக்கப்படுத்திப் பாராட்டி வாய்ப்புகள் பெற்று முன்னேற உதவுவார். செல்வந்தர்கள் எப்படிப்பட்டவராயினும் மனமுவந்து முன் வந்து நற்பணிகளுக்கு உதவுமாறு, புகழ்ந்து பேசியும், கருத்துக்களை விளக்கியும், பணிகளினால் கிடைக்கும் பயன், புகழ், புண்ணியங்களை எடுத்துக்கூறியும், இயக்க விடுவார். இவ்வகையில் அவர் திறமை ஒப்பற்றதாகும். அதனாலேயே நாடெங்கும் நூற்றுக்கணக்கான கோயிற்றிருப்பணிகளும் கல்விப் பணிகளும் அவர் ஆதரவிலும், எப்போதுமே நடைபெற்று வருகின்றன.

**செங்குந்தர் :**

இவ்வளவு சிறப்புகளும், இன்னும் எவ்வளவோ தகுதிகளும் உடைய இவர், நம் செங்குந்தர் குலத்தைச் சேர்ந்தவர் என்பது பலருக்குத் தெரியாது. தம் பெருமை தாமறியாத் தக்கவராகிய இவரும் தம் குலம் முதலிய பெருமைகளைச் சொல்லிக் கொள்வதில்லை. “ஒன்றே குலம் ஒருவனே தேவனும்” “யாதும் ஊரே யாவரும் கேளிர்” என்னும் நம்பழந் தமிழ் முன்னோர் நெறியிலேயே இருந்து வருபவர். எனினும் தத்தம் மரபைச் சேர்ந்த தக்கவர்களை அவ்வம்மரபினர்கள் போற்றிப் பாராட்டி மகிழ்வது கடமையும் இயல்புமாகும்.

அவ்வகையில் அமைந்ததே இச்சிறிய கட்டுரை.

**ஞானியாரடிகள் :**

இவ்வகையில், கடந்த நூற்றாண்டின் இறுதியிலும், இந்நூற்றாண்டின் முற்பகுதியிலும் "சைவமும் தமிழும்" தழைத்தினிதோங்க நாடெங்கும் ஞானசம்பந்தரைப் போலச் சிவிகையூர்ந்து சென்று அரும்பெருந் தொண்டுகளை ஆற்றிய திருக்கோவலூரா தீனம், திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகளும், நம் செங்குந்த மரபைச் சேர்ந்தவர்களாவர்.

**வாரியாருக்குரிய பட்டங்கள்:**

வாரியார் சுவாமிகளுக்கு அவ்வப்போது தக்கோர் பலர் பற்பல பட்டங்களை வழங்கி மகிழந்துள்ளனர். அவற்றுள் சில வருமாறு:

மதுரை ஆதீனம் சூட்டிய பட்டம் - "அருள் மொழி அரசு"
தருமை ஆதீனம் - "அமுதமொழிக் கொண்டல்"
காஞ்சி காமகோடி பீடம் - "சரஸ்வதி கடாக்ஷாம்ரதம்"
அகோபிலமடம் ஜீயர் - "ஷட்பதாநந்தர்"
ரிஷிகேசம் சிவானந்தர் - "ப்ரவசன சாம்ராட்"
ரிஷிகேசம் சிவானந்தர் - "திருப்புகழ் ஜோதி"
தமிழக அரசு - "கலைமாமணி"
தமிழிசைச் சங்கத்தார் - "இசைப்பேரறிஞர்"
அண்ணாமலை பல்கலைக் கழகத்தார் - "டாக்டர்"

மற்றும் முத்தமிழ் வள்ளல், ஞானக்கதிரவன், அமுதப்பெருங்கடல், பிரசங்க சக்ரவர்த்தி, சொற்பொழிவுக்கடல், முத்தமிழ் ரத்னாகரம், சொல்மாரிவாரி, திருப்பணிச்சரபம், திருப்பணிச் சக்கரவர்த்தி, தரும மூர்த்தி எனப் பல பட்டங்கள் வழங்கப்பட்டன. இந்தியத் தலைநகராகிய டெல்லியிலுள்ள "சங்கீத அகாடமி"யும் "Fellowship" எனும் தேசிய விருதினைக் கொடுத்துள்ளது.

மக்களால் அவர் 64-வது நாயனார் என்று போற்றப்படுகிறார். அவருடைய 80ஆம் ஆண்டு நிறைவு முத்து விழா மதுரையில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. காங்கேயநல்லூரில் அவருடைய வெண்கலச் சிலையும் நிறுவப்பட்டது.

**வாழ்க வாரியார்!**

வாரியார் புகழ் விரிப்பிற்பெருகும். தொகுப்பின் எஞ்சும் ஆதலினாலும் இது அவர்களுடைய வரலாற்றைக் கூறுவதல்ல. பொதுவாக அவர்களின் பொறுப்புகளைக் குறிப்பிட்டுப் போற்றும் சிறு கட்டுரையே.

7.11.1993 அன்று லண்டனிலிருந்து இந்தியா திரும்பியபோது விண்ணில் விமான பயணத்தின் போது இயற்கை எய்தினார்.

வாரியார் நம் மரபினர் என்பதும், அவர் காலத்தில் நாம் வாழ்கிறோம் என்பதும் மிகவும் மகிழ்ச்சிக்குரிய, நினைந்து நினைந்து பெருமிதம் கொள்ளத்தக்க செய்தியாகும்.

வாழ்க வாரியார் சுவாமிகள்!
விளங்குக அவர் தொண்டுகள்!
வளர்க செங்குந்தர் புகழ்!

வெல்க செங்குந்த மகாஜன சபையின் நன் முயற்சிகள்!

- அருள்மொழி அரசு ந.ரா. ஆடலரசு

## அறுபத்துமூவருள் பத்துப்பேர் செங்குந்தர் மரபினர்

பெரிய சிவன் கோயில்களில், வரிசையாக அறுபத்து மூன்று நாயன்மார்கள் சந்நிதியை அவசியம் பார்த்திருக்கலாம்.

திருமயிலாப்பூரில் அறுபத்து மூவர் விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருவதையும் அறிவீர்கள்.

இந்த அறுபத்து மூன்று நாயன்மார்களில், பத்து நாயன்மார்கள் நம் செங்குந்த மரபைச் சார்ந்தவர்கள் என்பதை அறிய நீங்கள் வியப்புறலாம். ஆனால் அது உண்மை!

வித்வசிரோமணியாகிய புகழேந்திப் புலவர் வேளாண் மரபினைச் சார்ந்தவராயினும், செங்குந்த மரபினரைப் பற்றிச் செய்துள்ள **திருக்கை வழக்கத்தில்** பதின்மரைக் குறித்துள்ளார்.

இதுபோலவே மகா கவியாகிய கம்பர் வேளாண்மரபினரைச் சன்மானித்துப் பாடிய திருக்கை வழக்கத்தில் எண்மரைக் (செங்குந்தரை) குறித்துள்ளார்.

இவ்விருவரும் கூறிய பிரபந்தத்தில் குற்றங் கற்பிப்பதற்கு எவராலாகும்?

**பதின்மர் துதி**

மலர் வீழ்த்தயானைகரந் துணித்தோர் வேதமந்திர மாப்பகர்ந்தோர் நீற்றுண்மை கொண்டோர்.

வலமை பெறுமாரூரர் முன்படர்ந்தார் வாவியினாற் கண் பெற்றோர் மாதே வன்றா.

னிலவுமுடி யெனப் பூண்டோ ரதிரைக் கணீனிதிய மளிப்போர் புற்றீப மெரிப்போர்பாப்

பலமூவேந்தர்க்குரைப் போர் முதளிப் போர் குந்தப்படைக்குலத்திலவதரித்த பதின்மரையும் பணிவாம்.

- புகழேந்தி

1. சிவகாமியாண்டார் கொண்டு வந்த பள்ளித் தாமத்தைப் பறித்துச்சி தறிய யானையைத் தடிந்த **எறிபத்தநாயனாரும்.**

2. வேத தாற்பரியங்கள் அனைத்தையும் மூவாயிரம் திருமந்திரமாகத் திருவாய் மலர்ந்த **திருமூல நாயனாரும்.**

3. திருவெண்ணீற்றின் உண்மையைக் கடைப் பிடியாக் கொண்டிருந்த **மெய்ப்பொருள் நாயனாரும்.**

4. ஆளுடைய நம்பிகள் திருக்கயிலைக் கெழுந்தருளுவதுணர்ந்து யோகத்தால் அவரைத் தியானித்துக் கொண்டு அவர்க்குமுன் சென்றருளிய **பெருமிழலைக்குறும்ப நாயனாரும்.**

5. சமணர்களுடன் வாதிட்டுக் குளந்தோண்டிக் கண்பெற்றுக் கொண்ட **தண்டியடிகள் நாயினாரும்.**

6. சிவபெருமான் திருவடி சூட்டப் பெற்றமையையே முடியாகக் கொண்டு உலகாண்ட **கூற்றுவநாயனாரும்.**

7. பிரதி திருவாதிரை நட்சத்திரத்தில் சிவனடியார்கட்குப் பொருளளித்து வந்த **நரசிங்க முனையரைய நாயனாரும்.**

8. 'தமிழில் கோவைபாடி மூவேந்தர்க்கும் பொருளுணர்த்தி வந்த **காரிய நாயனாரும்**

9. சிவனடியார்க் கமுதளித்துவந்த **இடங்கழி நாயனாரும்**

10. கணம்புல்லெரித்து சிதைநீட்டி முத்தி பெற்ற **கணம் புல்ல நாயனாரும்**

என்று சொல்லத்தக்க செங்குந்தர் குலத்தில் அவதரித்த இப்பதின்மரையும் வணங்குவோம்; வழிபடுவோம்.

**- திரு. S.T. சம்பந்தன்**

## ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை

தமிழ் நாட்டில் உள்ள ஓரிரு பழம்பெரும் சபைகளுள் ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜன சபை ஒன்றாகும். சென்னை, இராயப்பேட்டை நெ.5, டிடிகே. சாலையில் அமைந்துள்ள சபையின் நூற்றாண்டு விழா 11.01.2004 அன்று கொண்டாடப்பட்டது. தற்போது நூற்றாண்டு விழா காணும் அமரர் சி. நடராஜ முதலியார் 1973 முதல் 1984 வரை சபையின் தலைவராக அருந்தொண்டாற்றினார். சுமார் 20 ஆண்டுகளாக சபையில் பல்வேறு பணிகளை மேற்கொண்ட அவர் தலைவராக இருந்தபோது 05.08.1983 அன்று சபையின் முத்துவிழாவும் திரு.வி.க. நூற்றாண்டு விழாவும் வெகு விமரிசையாக நடத்திக் காட்டினார். முத்து விழாவிற்கு மாண்புமிகு அறநிலைய மற்றும் செய்தி துறை அமைச்சர் ஆர்.எம். வீரப்பன் அவர்கள் தலைமை தாங்கினார். டாக்டர் நா. மகாலிங்கம், ம.பொ.சிவஞானம் மற்றும் டாக்டர் அவ்வை நடராஜன் ஆகியோர் சிறப்புரை ஆற்றினார்கள்.

மேற்படி சபை 1903 ஆம் ஆண்டு யாழ்பாணம் கதிரைவேற்பிள்ளை தலைமையில் திரு.வி.கலியாண சுந்தரனார் முயற்சியால் தொடங்கப்பட்டது. முதன் முதலில் சென்னை இராயப்பேட்டை முத்து முதலி தெருவில் குத்தம்பாக்கம் அப்பாசாமி முதலியார் வீட்டில் ஓர் அறையில் ஆரம்பிக்கப்பட்டது. பின்னர் சுந்தரேஸ்வரர் கோயிலில் சபையின் கூட்டங்கள் நடைபெற்றன. அப்போது ஆண்டு விழாக்கள் இராயப்பேட்டை வீதி மற்றும் வீடுகள்தோறும் வாழை மரங்கள், மாவிலை தோரணங்கள் நீர் மோர், பானகம் வழங்குவதுடன் முருகபெருமான் படம் திருவீதி உலா நடைபெறும். தேவார பாவிசையுடன் மகேசுரபூசை முடிய இராயப்பேட்டை முழுவதும் சிவலோகமாகக் காட்சி அளிக்கும்.

1907ஆம் ஆண்டு கதிரைவேற்பிள்ளை மறைவுக்குப் பின் இராசப்ப முதலியார் தலைமையில் தற்போது உள்ள இடத்தில் சபை நிறுவப்பட்டது. 'குகானந்த நிலையம்' என்ற கட்டிடமும் சுற்றியுள்ள இடமும் தானமாகவும், கிரையமாகவும் பாலசுந்தர முதலியார் உதவி புரிந்திட சபைக்கு சொந்த இடம் அமையப் பெற்றது. 1934ஆம் ஆண்டு ஞானியார் சுவாமிகள் தலைமை ஏற்றுப் பணி ஆற்றிட திரு.வி.க.வின் ஊக்கமும் ஆக்கமும் சபைக்கு மேலும் மெருகு ஊட்டியது. பின்னர்

மீனாட்சி சுந்தரனார் சபைத் தலைமை ஏற்றார். அவருக்கு அடுத்தாற்போல் சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் ஏறத்தாழ 30 ஆண்டுகள் சபைக்கு பணி ஆற்றினார். அவர் இயற்கை எய்திய பிறகு சி. நடராஜ முதலியார் அவர்கள் சபைத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டு பல்வேறு நிலைகளில் 20 ஆண்டுகாலம் சபைக்கு பணி ஆற்றினார்.

1954ஆம் ஆண்டு சபையின் திரு.வி.க. மணி மண்டபத்திற்கு மாண்புமிகு முதலமைச்சர் இராஜாஜி அவர்களால் அடிக்கல் நாட்டப்பட்டது. காஞ்சி காமகோடி சங்கராச்சாரியார் சந்திரசேகர மாமுனிவர் சபைக்கு எழுந்தருளி சபை கட்டட அறக்கட்டளைகளை நிறுவினார். 21.09.1961. அன்று மாண்புமிகு முதலமைச்சர் பக்தவத்சலம் அவர்களால் 'திரு.வி.க. மணி மண்டபம்' கட்டடத் திறப்பு விழா நடைபெற்றது. 1966ல். சபையில் திரு.வி.க. தமிழ்க் கல்லூரி தொடங்கப்பட்டது. பாரதியார் சபைக்கு வருகை புரிந்து முருக பெருமானைப் பற்றி பாடல் ஒன்று பாடியுள்ளார். ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் அடிக்கடி சபைக்கு விஜயம் செய்வார்கள். திருமுருக கிருபானந்தவாரியார் இச்சபையில் இசை சொற் பொழிவுகள் ஆற்றியுள்ளார்கள். மயிலை குருஜி, காயத்ரி சுவாமிகள் ஆகியோர் இச்சபைக்கு வருகை புரிந்துள்ளார்கள். சபையின் வைரவிழா 1968ல் நடைபெற்றது. 25.04.1978ல் பவழ விழாவும் 05.08.1983ல் முத்து விழாவும் நடந்தேறின. திரு. சி.வா. கிருஷ்ணமூர்த்தி, சபைத் தலைவராக பொறுப்பு வகித்த போது 11.01.2004 அன்று சபையின் நூற்றாண்டு விழா முன்னாள் தலைமை நீதி அரசர் பு.ரா. கோகுலகிருஷ்ணன் தலைமையில் அஞ்சல் துறைத் தலைவர் சீனிவாசராகவன் திரு.வி.க. உருவம் பொறித்த அஞ்சல் உறையை வெளியிட, துணைவேந்தர் டாக்டர் ச.ப.தியாகராஜன் மற்றும் அவ்வை நடராஜன் சிறப்புரை ஆற்றிட வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. தற்போதைய தலைவர் திரு.அ. கணேசன் தலைமையில் வார வழிபாடு, மாதாந்திர மற்றும் முக்கிய பண்டிகை நாட்களில் ஆன்றோர்கள் சான்றோர்கள் பலர் சிறப்புரை ஆற்றிட சபை சீரிய தொண்டுகள் சில செய்து வருகின்றது. மேன்மேலும் சபை வளர்ந்திட ஸ்ரீ பாலசுப்பிரமணிய பெருமான் அருளை வேண்டி வணங்குகின்றோம்.

## சிவனும் எட்டும்

சிவபெருமானும் எட்டு என்ற எண்ணும் பல வகையில் தொடர்பு உள்ளனவாகக் கருதப்படும். சிவபெருமானின் இயற்கை திருமேனிகள் எட்டாகும். அவை அஷ்டமூர்த்தங்கள் எனப்படும்.

1. மண்லிங்கம் - காஞ்சி, திருவாரூர்
2. நீர்லிங்கம் - திருவானைக்காவல்
3. அக்னி லிங்கம் - திருவண்ணாமலை
4. ஆகாயலிங்கம் - சிதம்பரம்
5. சந்திரலிங்கம் - மதுரை
6. சூரியலிங்கம் - திருச்சி
7. காற்றுலிங்கம் - திருக்காளத்தி
8. ஆன்ம லிங்கம் - திருப்பெருந்துறை

**சிவனின் எட்டு திருநாமங்கள். அஷ்ட மந்திரங்கள் என்று அழைக்கப்படும்.**

1. ஓம் உமாமகேஜவராய நம
2. ஓம் பரதேவாய நம
3. ஓம் திரியம்பகாய நம
4. ஓம் சோமசுந்தராய நம
5. ஓம் சர்வாய நம
6. ஓம் பீமாய நம
7. ஓம் மஹாபளாய நம
8. ஓம் நீலகண்டாய நம

**சிவபெருமானின் எட்டு குணங்களாவன**

1. தன் வயத்தனாதல்
2. தூய உடம்பை உடையவன்
3. இயற்கை உணர்வினன் ஆதல்
4. முற்றும் உணர்ந்தவன்
5. பாசங்களில் நீங்கி நின்றவன்

6. பேரருள் படைத்தவன்
7. அடிமுடி யில்லா ஆற்றலுடையவன்
8. வரம்பிலா இன்பமுடையவன்

**சிவபெருமானின் எட்டு வீரச்செயல் தலங்கள்**

1. திருக்கண்டியூர் - பிரமன் தலையரிந்தது
2. திருக்கோவலூர் - அந்தகனை அழித்தது
3. திரு அதிகை - முப்புரம் எரித்தது
4. திருப்பறியலூர் - தக்கன் யாகம் அழித்தது
5. திருவிற்குடி - ஜலந்தரவதம் புரிந்தது
6. திருக்கடவூர் - யமனை வீழ்த்தியது
7. திருவழுவூர் கஜசம்ஹாரம் செய்தது
8. திருக்கொருக்கை - மன்மதனை எரித்தது

**சிவபெருமானின் ஆயுதம் ஏந்திய எட்டு தோள்கள்**

1. டமருகம்
2. மணி
3. கேடயம்
4. கத்தி
5. சூலம்
6. தழல் வடிவங்கள்
7. வேதாளம்
8. கபால பாத்திரம்

**சிவனின் அஷ்ட புஷ்பங்கள்**

1. புன்னை
2. வெள்ளெருக்கு
3. சண்பகம்
4. நந்தியாவர்த்தம்
5. நீலோற்பலம்
6. பாதிரி
7. அலரி
8. செந்தாமரை

**சிவபெருமானின் அஷ்ட பரிவாரங்கள் என்றும் நீங்காது அருகில் இருப்பவர்கள்**

1. நந்தி
2. பிருங்கி
3. கணபதி
4. முருகன்
5. மாகாகாளன்
6. உமா
7. விருஷபர்
8. சண்டிகேச்சுவரர்

**சிவபெருமானின் தல வழிபாடு செய்தவர்கள்**

1. இராமர் - இராமநாதசுவாமி - இராமேஸ்வரம்
2. இராவணன் - இலங்கேஸ்வரன் - இலங்கை
3. குரங்கு - வாலீஸ்வரர் - திருச்சி (கருவூர்)
4. மயில் - கபாலீஸ்வரர் - திருமயிலை
5. ஆமை - கச்சபேஸ்வரர் - காஞ்சிபுரம்
6. சிலந்தி - காளத்தீஸ்வரர் - ஸ்ரீ காளத்தி
7. பாம்பு - வாசுகீஸ்வரர் - திருவொற்றியூர்
8. மீன் - மச்சயோகீஸ்வரர் - காஞ்சிபுரம்

சிவாய நம
அபாயமேது மில்லை

## திருமுருகாற்றுப்படையில் அறுபடை வீடுகள்

### 1. திருப்பரங்குன்றம்

முருகப்பெருமான் சிவவழிபாடு செய்த பின்னர் முனிவர்கள், சேனைத் தலைவர்கள் முதலானோர் சூழ மயில் வாகனத்தில் ஏறி திருச்செந்தூரை விட்டு புறப்பட்டார். நான்முகன், திருமால், இந்திரன் ஆகியோரும் முருக பெருமான் ஆணைப்படி பின் தொடர்ந்தனர். குறிஞ்சி நிலம் வழியாக நான்மாடக் கூடல் என்னும் மதுரை நகரை அடைந்தார். அங்கே பராசுர முனிவரின் ஆறு புதல்வர்களும் தேவர்களும் முருக பெருமானை வணங்கி அவர்கள் விருப்பத்திற்கேற்ப திருப்பரங்குன்றத்தில் வீற்றிருந்தார்.

தன் பகைவன் சூரபதுமனை அழித்து விண்ணுலகை ஆளச் செய்த இந்திரன் கைம்மாறாக தன் மகள் தெய்வயானையை முருகபெருமானுக்கு திருமணம் சிறப்புடன் செய்து மகிழ்ந்தான். இவ்வாறு பெருமை பெற்ற திருப்பரங்குன்றம் நக்கீரர் 'திருமுருகாற்றுப் படையில்' முதலாவது படை வீடாகப் பாடி அருளினார்.

### 2. திருச்செந்தூர்

கடல் அலைகள் அழகாக அலைகின்ற படியால் நக்கீரர் திருச்செந்தூரை 'திருச்சீர் அலைவாய்' என்று பாடி அருளினார். சிறப்பு மிக்க திருச்செந்தூர் இரண்டாவது படை வீடு முருக பெருமான் கந்த மலையிலிருந்து புறப்பட்டு படைகளுடன் திருச்செந்தூர் தங்கினார். வீரபாகு தேவரை சூரபதுமனிடம் தூது அனுப்பி தேவர்களை சிறையிலிருந்து விடுவிக்கும்படி முறையிட்டத்தில் அவன் மறுத்தான் படைகளுடன் சென்று போர் புரிந்து சூரபதுமனைச் சம்ஹாரம் செய்தார்.

சஷ்டி முடிந்ததும் சூரசம்ஹாரம் நிகழ்ச்சி திருச்செந்தூரில் சிறப்பு வாய்ந்ததாகும்.

**3. திரு. ஆவினன் குடி (பழநி)**

ஒரு சமயம் கைலாய மலைக்கு சிவபெருமான் பார்வதி தேவியை நாரதர் தரிசித்து மாங்கனி ஒன்றை கொடுத்தார். அக்கனியை இருவரும் பெற்றுக் கொண்டு இவ்வுலகை யார் முதலில் வலம் வருகிறார்களோ அவர்களுக்கு இக்கனி என்று தம் மக்கள் விநாயகர், முருகனிடம் போட்டி வைத்தார் சிவன். விநாயக பெருமான் தாய் தந்தையரை வலம் வந்து உங்கள் இருவருக்குள் உலகம் இருக்கிறது என்று சொல்லி கனியைப் பெற்றுக் கொண்டார். மயில் மீது உலகை சுற்றி வந்த முருகன் செய்தியறிந்து கோபம் மிகுண்டு அனைத்தையும் உதறி எறிந்து கோவணத்துடன் தண்டம் ஏந்தி கைலாய மலையை விட்டு பழநி பகுதியில் தங்கிவிட்டார். அம்மையும் அப்பனும் தேடிச் சென்று பழம் நீ தானே உனக்கு வேறு பழம் வேண்டுமா என்று ஆறுதல் கூறியதால் அம்மலைக்கு பழனி என்று பெயராகியது ஆவியர்கள் குலத்தைச் சேர்ந்தோர் ஆட்சி செய்ததால் ஆவிநன்குடி என்று பெயர் பெற்று இத்தலம் மூன்றாவது படை வீடு. சிவத்துள் உலகைக் கண்டார் விநாயகர். உலகத்தில் சிவனைக் கண்டார் முருகன்.

**4. சுவாமி மலை (திருவேரகம்)**

நாரதர் சிவபெருமானுக்கு வேள்வி செய்தார். அதில் ஓர் ஆட்டுக்கடா தோன்றி உயிர்களை நாசம் செய்தது. நாரதர் திருக்கைலாயம் ஏறுகையில் முருகபெருமான் லட்சக்கணக்கான வீரர்களோடு விளையாடிக் கொண்டிருந்தார். அவரிடம் முறையிட முருகபெருமான் கைலாயத்தில் எழுந்தருளினார். சிவனை தரிசித்து பிரம்மா

திரும்பிக் கொண்டிருந்தார். முருகனை வணங்காமல் சென்ற பிரம்மாவை அழைத்து என்ன தொழில் புரிகின்றாய் என்று வினவினார். அதற்கு படைப்பு தொழில் புரிகின்றேன் என்றார் பிரம்மா. வேதங்களை தெரியுமா என்று கேட்க ஓம் என்ற சொல்லை வைத்து வேதம் சொல்ல தொடங்கினார் பிரம்மா அந்தப் பிரணவ மந்திரத்தையே ஒரு திருமுகமாக கொண்டுள்ள முருகபிரான் "ஓம்" என்ற சொல்லுக்கு பொருள் கூறுக என்றார். பிரணவத்தின் பொருளை அறியாத பிரம்மாவின் நான்கு தலைகளும் குலுங்குமாறு முருகன் குட்டி திருவடிகளில் வீழுமாறு செய்தார். அவனை சிறையில் அடைத்தார். தேவர்கள் வேண்டுகோள்படி சிவன் முருகனிடம் பிரம்மாவை விடுவிக்க சென்றார். விடுவிக்கப்பட்ட பிரம்மா சிவனிடம் குமரக்கடவுள் அடியேனுக்கு தண்டனை அளித்து நன்மையே செய்தார். தன் ஆணவம் ஒழிந்து உள்ளம் தூய்மை பெற்றேன் என்றார் பிரம்மா. சிவன் புன்முறுவலோடு முருகனை தன் மடி மீதமர்த்தி சுப்பிரமணப் பெருமாளை "ஓம்" என்ற பிரணவ மந்திரத்தை விளக்குமாறு கேட்டார். பிரணவப் பொருளை யாவரும் அறியக் கூறக்கூடாது ரகசியமாகக் கூறுவேன் என்று சிவன் காதில் முருக பெருமான் ஓதினார். இக்காட்சியை தகப்பன் சுவாமியாக முருகனை சுவாமி மலையில் காணலாம். இத்தலம் நான்காம் படைவீடு.

**5. திருத்தணி (குன்றுதோறாடல்)**

நம்பிராஜன் ஆசிகூறி வள்ளி நாயகியை முருகனுக்கு மணம் புரிந்தான். வள்ளியை மணம் புரிந்து சிவனை வணங்கி கைலாயம் சென்றார். முருகபெருமாள் திருமணக் காட்சி திருத்தனி என்னும் ஐந்தாம்படை வீட்டில் தரிசிக்கலாம். பல குன்றுகளையும் குறிக்க குன்று தோறாடல் என்ற பெயர் பெற்றது.

6. பழமுதிர்சோலை

முதிர்ந்த பழங்களை உடைய சோலை யாதலால் பழமுதிர்சோலை எனப்பட்டது. அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழில் பழமுதிர்சோலை முருகனின் சிறப்புகளைட் பற்றி பாடியுள்ளார். அங்கு நூபுர கங்கையில் மக்கள் வேலை வைத்து வணங்கினார்கள். திருமாலிருந்த சோலை மலையே அழகர் கோயில். முருகனின் பழமுதிர் சோலையாக திகழ்ந்தது. இது சைவ வைஷ்ணவ ஒற்றுமையை நிலை பெறச் செய்கிறது. இத்தலம் முருகபெருமானின் ஆறாவது படை வீடாகும்.

வள்ளி தேவயானை மணம் புரிந்த முருகன் திருக்கோலம் முறையே இச்சா சக்தி, கிரியா சக்தி மூலம் ஞான சக்தி பெறுவதே என்று பொருள் கொள்ள வேண்டும்.



## குமாரஸ்தவம்

பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் பாடியருளிய குமாரஸ்தவம் ஓர் மந்திர நூலாகும். முருகப் பெருமானின் அனைத்து சொரூப நிலையைப் போற்றி வணங்கும் பாடல். பின்வரும் 44 வரி பாடலுடன் பொருளையும் புரிந்து போற்றுவது சாலச் சிறந்ததாகும்.

1. **ஓம் ஷண்முக பதயே நமோ நம**
   பொருள் : ஆறுமுகத் தலைவனே போற்றி
2. **ஓம் ஷண்மத பதயே நமோ நம**
   பொருள் : ஆறு சமயங்களான சைவம், வைணவம், சாக்தம், சௌரம், காணா பத்யம், கௌமாரம் ஆகியவற்றிற்குத் தலைவனே போற்றி.
3. **ஓம் ஷட்க்ரீவ பதயே நமோ நம**
   பொருள் : ஆறு திருக்கழுத்துக்களை உடைய தலைவனே போற்றி
4. **ஓம் ஷட் கிரீட பதயே நமோ நம**
   பொருள் : ஆறு கிரீடங்களை அணிந்துள்ள தலைவனே போற்றி
5. **ஓம் ஷட்கோணபதயே நமோ நம**
   பொருள் : சரவணபவ என்று ஆறு கோண சக்கரத்தில் எழுந்தருளியிருக்கும் தலைவனே போற்றி.
6. **ஓம் ஷட்கோச பதயே நமோ நம**
   பொருள் : ஆறு தோத்திர பாடல்களான திருமுருகாற்றுப்படை, திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, கந்தரந்தாதி, திருவகுப்பு ஆகியவற்றிற்குத் தலைவனே போற்றி
7. **ஓம் நவநிதி பதயே நமோ நம**
   பொருள் : ஒன்பது வகையான செல்வங்களுக்குத் தலைவனே போற்றி.

8. ஓம் சுபநிதி பதயே நமோ நமே
பொருள் : முக்தி எனப்படும் பேரின்பத்தின் தலைவனே போற்றி

9. ஓம் நரபதி பதயே நமோ நம
பொருள் : மண்ணுலக மக்களின் அரசனாக விளங்கும் தலைவனே போற்றி

10. ஓம் சுரபதி பதயே நமோ நம
பொருள் : சூரர் எனப்படும் தேவர்களுக்குத் தலைவனே போற்றி

11. ஓம் நடச் சிவ பதயே நமோ நம
பொருள் : நடனம் ஆடும் சிவனாகிய தலைவனே போற்றி

12. ஓம் ஷடக்ஷர பதயே நமோ நம
பொருள் : சரவணபவ என்ற ஆறெழுத்து தலைவனே போற்றி

13. ஓம் கவிராஜ பதயே நமோ நம
பொருள் : அகத்திய மாமுனிவர் போன்ற மற்ற கவியரசர்களின் தலைவனே போற்றி

14. ஓம் தபராஜபதயே நமோ நம
பொருள் : மனம், மொழி, மெய் ஒருங்கிணைந்து கடவுளை நினைப்பவர்க்கு அரசான தலைவனே போற்றி

15. ஓம் இகபர பதயே நமோ நம
பொருள் : மண்ணுலக, விண்ணுலக இன்பத்தை அளிக்கும் தலைவனே போற்றி.

16. ஓம் புகழ் முனி பதயே நமோ நம
பொருள் : திருப்புகழ் படிய அருணகிரிநாதத் தலைவரே போற்றி

17. ஓம் ஜய ஜய பதயே நமோ நம
பொருள் : புராண வரலாற்றில் நாரதர், இந்திரன்,

பிரமன், ஆரர்களை வெற்றி கண்ட தலைவனே போற்றி

18. **ஓம் நய நய பதயே நமோ நம**

பொருள் : ஆறுமுகமும் ஆன்மாக்களுக்கு நன்மை, இன்பங்களை அளிக்கும் தலைவனே போற்றி

19. **ஓம் மஞ்சுள பதயே நமோ நம**

பொருள் : அழகு என்னும் முருகனே போற்றி

20. **ஓம் குஞ்சரி பதயே நமோ நம**

பொருள் : தேவ குஞ்சரி தெய்வயானையின் தலைவனே போற்றி

21. **ஓம் வல்லி பதயே நமோ நம**

பொருள் : வள்ளி யம்மைக்குத் தலைவனே போற்றி

22. **ஓம் மல்ல பதயே நமோ நம**

பொருள் : மற்போரில் வல்லவனான தலைவனே போற்றி

23. **ஓம் அஸ்த்ர பதயே நமோநம**

பொருள் : கையை விட்டு சென்று பகைவரைத் தாக்கும் படைகளின் தலைவனே போற்றி

24. **ஓம் சஸ்திர பதயே நமோ நம**

பொருள் : வாள், வில், கதை போன்ற கைவிடாப் படைவனுக்கு தலைவனே போற்றி

25. **ஓம் சஷ்டி பதயே நமோ நம**

பொருள் : கந்த சஷ்டி விரதத்தின் தலைவனே போற்றி

26. **ஓம் இஷ்டிபதயே நமோ நம**

பொருள் : வேள்வி செய்து முடிப்பவனின் தலைவனே போற்றி

27. **ஓம் அபதே பதயே நமோ நம**

பொருள் : சத்து எனும் சிவனும் சித்து எனும் தேவியும் ஆனந்தம் எனும் அறுமுகனும் வேற்றுமை பேதமின்றி வீற்றிருப்பவனே போற்றி

28. **ஓம் சுபோத பதயே நமோ நம**
பொருள் : அஞ்ஞானத்தை நீக்கி மெய் ஞானத்தை அருளும் தலைவனே போற்றி
29. **ஓம் வியூஹ பதயே நமோ நம**
பொருள் : அசுரர்களை வீழ்த்திய சேனைப் படைகளின் தலைவனே போற்றி
30. **ஓம் மயூர பதயே நமோ நம**
பொருள் : மயில் வாகனத் தலைவனே போற்றி
31. **ஓம் பூத பதயே நமோ நம**
பொருள் : பூத வீர்களின் தலைவனே போற்றி
32. **ஓம் வேத பதயே நமோ நம**
பொருள் : ஈசுவரனின் நாத பிரம்மான ஓம் என்ற மந்திரத்திலிருந்த பிறந்த வேதங்களுக்குத் தலைவனே போற்றி
33. **ஓம் புராண பதயே நமோ நம**
பொருள் : பதிணென் புராணங்களின் தலைவனே போற்றி
34. **ஓம் பிராண பதயே நமோ நம**
பொருள் : ஆன்மா எனும் உயிர்களுக்குத் தலைவனே போற்றி
35. **ஓம் பக்த பதயே நமோ நம**
பொருள் : முருக பெருமானின் பக்தர்களாகிய அடியார்களுக்குத் தலைவனே போற்றி
36. **ஓம் முக்த பதயே நமோ நம**
பொருள் : ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று பாச பந்தங்களின்றும் விடுபட்டு முக்தி அடையும் ஆன்மாக்களின் தலைவனே போற்றி
37. **ஓம் அகார பதயே நமோ நம**
38. **ஓம் உகார பதயே நமோ நம**
39. **ஓம் மகார பதயே நமோ நம**

பொருள் : அ, வு, ம என்ற ஒலியின் சேர்க்கை ஓம் என்ற பிரணவப் பொருளாக எல்லா உயிர்களும் முருகனைச் சார்ந்து விளங்கும் தலைவனே போற்றி

40. **ஓம் விகாச பதயே நமோ நம**

பொருள் : நிலம் நீர் நெருப்பு காற்று ஆகாயம் இவ்வைந்து பூதங்களினின்றும் தோற்றுவித்து எங்கும் விகாசமாக பரவி நிற்கும் தலைவனே போற்றி

41. **ஓம் ஆதி பதயே நமோ நம**

பொருள் : ஐம்பெரும் மூர்த்திகளை ஒடுக்கி என்றும் அழியாமல் யாவற்றிற்கும் ஆன்மா மூலகாரணத் தலைவனே போற்றி

42. **ஓம் பூதி பதயே நமோ நம**

பொருள் : எல்லா செல்வங்களுக்கும் தலைவனே போற்றி

43. **ஓம் அமார பதயே நமோ நம**

பொருள் : மன்மதனை எரித்த ஐந்து முகச்சிவம் ஆறுமுகச் சிவமாகத் தோன்றியதால் மாரனை எரித்த தலைவனே போற்றி

44. **ஓம் குமார பதயே நமோ நம**

பொருள் : என்றும் குமரனாக விளங்கும் தலைவனே போற்றி

நன்றி. டாக்டர் ப. ராமன்

மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் அருளிய

# சிவபுராணம்

(சிவபெருமானின் பெருமையினையும் ஆன்மாக்களின் இயல்பினையும் அறிவித்து, ஆன்மாக்கள் நலம்பெறும் வழியினையும் விளக்குவது)

பழையநூல் ஒன்றினை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்ட உரை பாராயணம் செய்வோருக்கு உதவும் வகையில் தரப்படுகிறது.

படைப்பு : பு.மா. ஜயசெந்தில்நாதன், காஞ்சிபுரம்

திருச்சிற்றம்பலம்

1 : **நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க**

பொருள் : நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்து மந்திரம் வாழ்க எவ்வுயிர்க்கும் தலைவனாகிய சிவபெருமானின் திருவடிகள் வாழ்க

2 : **இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க**

பொருள் : கண் இமைக்கும் கணநேரங்கூட, என் உள்ளத்திலிருந் நீங்காத இறைவனுடைய திருவடிகள் வாழ்க.

3. : **கோகழி ஆண்ட குருமணி தன் தாள் வாழ்க**

பொருள் : கோகழி எனப்படும் திருப்பெருந்துறைத் தலத்தில் எழுந்தருளியிருந்து என்னை ஆட்கொண்ட குருவின் திருவடிகள் வாழ்க

4. : **ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க**

பொருள் : ஆகமங்களின் பொருளாக விளங்கி வழிபடுபவர்களுக்கு அருள் பரியும் இறைவனின் திருவடிகள் வாழ்க.

5. : **ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க**

பொருள் : ஒருவனாகவும் பலவடிவினனாகவும் விளங்குகின்ற தலைவனாகிய இறைவனின் திருவடிகள் வெற்றி பெறுக.

6. : **வேகம் கெடுத்து ஆண்ட வேந்தன் அடி வெல்க**

பொருள் : உயிர்களின் மனவேகத்தை நீக்கியாட்கொள்ளுகின்ற தலைவனாகிய இறைவனின் திருவடிகள் வெற்றி பெறுக.

7 : **பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல்கள் வெல்க**

பொருள் : பிறவியை வேரறக்கும் சிவபெருமானின் கழல் அணிந்த திருவடிக்ள வெற்றி பெறுக.

8 : **புறத்தார்க்குச் சேயோன் தன் பூங்கழல்கள் வெல்க**

பொருள் : தன்னை வணங்காதவர்க்குச் சேயோனாக இருப்பவனது அழகிய திருவடிகள் வெற்றி பெறுக.

9 : **கரம் குவிவார் உள் மகிழும் கோன் கழல்கள் வெல்க**

பொருள் : கைகளைக் கூப்பி வணங்குவோர்க்கு மகிழ்ந்து இன்பத்தையருளும் தலைவனின் திருவடிகள் வெற்றி பெறுக

10. : **சிரம் குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க**

பொருள் : தலைக்கு மேல் கைகளை உயர்த்திக் கூப்பி வணங்குவோரை உயர்வடையச் செய்யும் பெருமானின் திருவடிகள் வெற்றி பெறுக.

11 : **ஈசன் அடி போற்றி எந்தை அடி போற்றி**

பொருள் : எம் ஈசுவனின் திருவடிகட்கு வணக்கம். எம் தந்தையாகிய இறைவனின் திருவடிகட்கு வணக்கம்.

12. : **தேசன் அடி போற்றி சிவன் சேவடி போற்றி**

பொருள் : ஒளி வடிவினனாகிய இறைவனடிக்கு வணக்கம். சிவபெருமானின் செம்மையான திவடிகட்கு வணக்கம்.

13. : **நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி**

பொருள் : உள்ளத்து அன்பில் விளங்கித் தோன்றும் தூய்மையான இறைவனின் திருவடிகட்கு வணக்கம்

14 : **மாயப் பிறப்பு அறுக்கும் மன்னன் அடி போற்றி**

பொருள் : வஞ்சனையுடைய பிறவியினை வேறொடும் போக்கி அருளுகின்ற மன்னனாகிய இறைவனின் திருவடிகட்கு வணக்கம்

15. : **சீரார் பெருந்துறை நம் தேவன் அடி போற்றி**

பொருள் : சிறப்பு மிக்க திருப்பெருந்துறைத் தலத்தில் வீற்றிருக்கும் நம் தலைவனுடைய திருவடிகட்கு வணக்கம்

16. : **ஆராத இன்பம் அருளு(ம்) மலை போற்றி**

பொருள் : நீங்காத பேரின்பத்தை அருளுகின்ற மலைபோன்று உயர்ந்து விளங்குகின்ற இறைவனுக்கு வணக்கம்.

17. : **சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்**

பொருள் : சிவபெருமானாகிய அப்பெருமான் என் நெஞ்சில் வீற்றிருப்பதனால்

18. : **அவன் அருளாலே அவன்தாள் வணங்கிச்**

பொருள் : அப்பெருமானின் அருளையே துணையாகக் கொண்டு அவனுடைய திருவடிகளைத் தொழுது

19. : **சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை**

பொருள் : என் உள்ளம் மகிழுமாறு சிவபெருமானின் பெருமையைச் சொல்லும் "சிவபுராணத்தை"

20. : **முந்தை வினை எழுதும் ஓய உரைப்பன் யான்**

பொருள் : என் முன்பிறப்புக்களின் தீவினைகள் முழுவதுமாக நீங்கும் வண்ணம் உரைக்க யான் முற்படுகின்றேன்.

21. : **கண்ணுதலான் தன் கருணை கண்காட்ட வந்து எய்தி**

பொருள் : நெற்றிக்கண் உடைய பரமன், தன் கருணை நோக்கை என்பாற்செலுத்த, யான் அப்பெருமான் முன்பு சென்று

22. : **எண்ணுதற்கு எட்டா எழில் ஆர் கழல் இறைஞ்சி**

பொருள் : எண்ணுகின்ற எண்ணங்களுக்கு அப்பாற்பட்ட அப்பெருமானுடைய அழகிய திருவடிகளைத் தொழுது

23. : **விண்நிறைந்து மண் நிறைந்து மிக்காய் விளங்கு ஒளியாய்**

பொருள் : விண்ணிலும் மண்ணிலும் நிறைந்து, அவற்றின் மேம்பட்டு ஒளியாக விளங்கி

24. : **எண் இறந்து எல்லை இலாதானே நின் பெருஞ்சீர்**

பொருள் : எண் அளவு கடந்து, முடிவில்லாது நிற்பவனே உன்னுடைய பெருஞ்சிறப்பினை

25. : **பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்று அறியேன்**

பொருள் : கொடிய தீவினையுடையவனாகிய யான், புகழ்ந்து போற்றும் (வழியறியாதவனாய் உள்ளேன்) வழியறிகிலேன்.

26. : **புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரம் ஆகிப்**

பொருள் : (யான்) புல்லாய், பல்வகையான பூண்டுகளாய், புழுக்களாய், மரங்களாய்.

27. : **பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**

பொருள் : பலவகை மிருகங்களாய், பறவைகளாய், பாம்புகளாய்

28. : **கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**

பொருள் : கற்களாய், மனிதர்களாய், பேய்களாய், பூதங்களாய்

29. : **வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்**

பொருள் : வலிய அசுரர்களாய், முனிவர்களாய், தேவர்களாய்

30. : **செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்**

பொருள் : தோற்றுவிக்கப்பட்டு விளங்கும் அசையும் அசையாப் பொருள்களுள்

31. : **எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்**

பொருள் : அடங்குகின்ற இப்பிறவிகள் அனைத்தும் எடுத்துச் சலிப்புற்றேன், பெருமானே!

32. : **மெய்யே உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடு உற்றேன்**

பொருள் : மெய்ப் பொருளான உம் அழகிய திருவடிகளைக் காணும் பேறு பெற்று, இன்று (இக்கணம்) வீடுபேறு பெற்றேன்.

33. : **உய்ய என் உள்ளத்துள் ஓங்காமாய் நின்ற**

பொருள் : நான் ஈடேறத்தக்க வகையில் என் நெஞ்சில் "ஓம்" எனும் பிரணவ சொரூபமாக எழுந்தருளிய

34. : **மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்**

பொருள் : மெய்ப்பொருளே! தூய்மையானவனே! இடபவாகனத்தை உடையவனே! வேதங்கள்;

35. : **ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே**

பொருள் : தலைவனே என்று போற்றிப் புகழ ஆழ்ந்தும் பரந்தும் நுண்மையாகவும் இருப்பவனே

36. : **வெய்யாய் தணியாய் இயமானனாம் விமலா**

பொருள் : வெப்பமாய், குளிர்ச்சியாகவும், விளங்குகின்ற உயிர்த்தத்துவமாக உள்ள தூயவனே

37. : **பொய்யாயின எல்லாம் போய் அகல வந்தருளி**

பொருள் : என்னிடத்துள்ள பொய்த்தன்மைகள் எல்லாம் நீங்குமாறு செய்து எழுந்தருளி (குருவடிவில் எழுந்தருளி)

38. : **மெய்ஞ்ஞானம் ஆகி மிளர்கின்ற மெய்ச்சுடரே**

பொருள் : உண்மையறிவாகி ஒளிர்கின்ற அறிவுச்சுடரே

39. : **எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே**

பொருள் : எத்தகைய அறிவும் இலலாத எளியேனுக்குப் பேரின்பப் பேற்றினை அளித்த இன்ப வடிவானவனே.

40. : **அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே**

பொருள் : எளியேனின் அறியாமையைப் போக்குவிக்கும் நல்லறிவுச்சுடராக விளங்குபவனே

41. : **ஆக்கம் அளவு இறுதி இல்லாய் அனைத்துலகும்**

பொருள் : தோற்றமும் அளவுபடுதலும் முடிவுறுதலும் ஆகியவை இல்லாதவனே, எல்லாவுலகங் களையும்

42. : **ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்**

பொருள் : நீயே படைப்பாய், காப்பாய், ஒடுக்குவாய், முடிவில் அனைத்து உயிர்களுக்கும் அருள் செய்வாய்

43. : **போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பில்**

பொருள் : நீயே எளியேனைப் பல பிறவிகளிலும் ஆட்படுத்துவாய், உன்னுடைய மேன்மையான திருத்தொண்டில் (அடிமைத்திறத்தில்) ஈடுபடுத்துவாய்

44. : **நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே**

பொருள் : மலரின் மணம் போன்று எங்கும் பரந்து இருப்பவனே! உன்னை வணங்காதவர்க்கு அப்பாற்பட்டவனாயும் வணங்குவோர்க்கு அண்மையனாயும் இருப்பவனே!

45. : **மாற்ற(ம்) மனம் கழிய நின்ற மறையோனே**

பொருள் : சொல்லுக்கும், மனத்திற்கும் கடந்து நிற்கின்ற வேதவடிவினனே! (வேதப்பொருளாய் விளங்குபவனே)

46. : **கறந்தபால் கன்னலொடு நெய் கலந்தாற் போல**

பொருள் : கறந்த (சுவைமிக்க) பாலில், கருப்பஞ் சாற்றையும் நெய்யையும் கலந்தாற்போல

47 : **சிறந்த அடியார் சிந்தனையுள் தேன் ஊறி நின்று**

பொருள் : அன்பிற் சிறந்த அடியார்களின் நெஞ்சத்தில் (சிந்தையில்) தேனாக ஊறியிருந்து.

48. : **பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான்**

பொருள் : எடுத்த பிறப்பினைத் தன் கருணையால் போக்குவிக்கும் எங்கள் பெருமானே!

49. : **நிறங்கள் ஓர் ஐந்து உடையாய், விண்ணோர்கள் ஏத்த**

பொருள் : நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களிலும் பரவியிருந்து அவற்றின் ஐந்து நிறங்களையும் பெற்றுள்ள பெருமானே! விண்ணுலகத் தேவர்கள் உம்மைத் தொழுது ஏத்தவும்

50. : **மறைந்து இருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை**

பொருள் : எம்பெருமானே நீ அவர்கட்கு வெளிப்படாமல் மறைந்திருந்தாய் ஆயினும் வலிய வினைக்கு ஆட்பட்ட எளியேனை

51. : **மறைந்திட மூடிய மாய இருளை**

பொருள் : மறைக்குமாறு (என்னை) மூடியுள்ள அறியாமையை (இருளை)

52. : **அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்**

பொருள் : நல்வினை (புண்ணியம்) தீவினை (பாவம்) என்னும் வலிமையான கயிற்றினால் பிணித்துக் கட்டி

53. : **புறந்தோல் போர்த்து எங்கும் புழு அழுக்கு மூடி**

பொருள் : புறத்தே மேல் தோல் எனும் போர்வையையிட்டு, உள்ளிருக்கும் புழுக்களாய் அழுக்குகளை வெளியில் தெரியாதபடி மறையுமாறு செய்து

54. : **மலம் சோரும் ஒன்பது வாயிற் குடிலை**

பொருள் : அழுக்கு, வெளிப்படுகின்ற ஒன்பது வாயில்களை உடைய உடம்பு என்னும் (இக்) குடிசை

55. : **மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய**

பொருள் : மயங்கி வருத்தமடையுமாறு ஐம்புலன்களும் உள் இருந்து வஞ்சிக்கும் காலத்திலும்

56. : **விலங்கு மனத்தால் விமலா உனக்குக்**

பொருள் : என் மாறுபட்ட மனத்தால் தூயவனே உன்பால்

57. : **கலந்த அன்பாகிக் கசிந்து உள் உருகும்**

பொருள் : விரவிய அன்புகொண்டு, மனம்நெகிழ்ந்து உருகுகின்ற

58. : **நலம்தான் இலாத சிறியேற்கு நல்கி**

பொருள் : நலமாகிய பக்தியானது சிறிதும் இல்லாத எளியேனுக்கும் அருள்புரிந்து

59. : **நிலந்தன்மேல் வந்தருளி நீள் கழல்கள் காஅட்டி**

பொருள் : இவ்வுலகில் குருவடிவில் எழுந்தருளி உம் நெடிய திருவடிகளைக் காட்டி

60. : **நாயின் கடையாய்க் கிடந்த அடியேற்குத்**

பொருள் : நாயினும் கீழ்ப்பட்டவனாகிய எளியேனுக்கு

61. : **தாயின் சிறந்த தயா ஆன தத்துவனே**

பொருள் : தாயைக் காட்டிலும் சிறந்த கருணைகாட்டிய தத்துவனே (மெய்ப்பொருளானவே)

62. : **மாசு அற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே**

பொருள் : குற்றமில்லாத ஒளி பொருந்திய மலர்ச்சுட ரானவனே

63. : **தேசனே தேன் ஆர் அமுதே சிவபுரனே**

பொருள் : ஒளி வடிவனாவனே தேனாய் இனிக்கும் அமுதமே சிவபுரத்தில் வீற்றிருக்கும் தலைவனே.

64. : **பாசமாம் பற்று அறுத்துப் பாரிக்கும் ஆரியனே**

பொருள் : பாசமாகிய பற்றினை அறுத்து எமைக்காக்கும் மேன்மையனே

65. : **நேச அருள் புரிந்து நெஞ்சில் வஞ்சம் கெடப்**

பொருள் : உன்னுடைய கருணையால் எளியேனுக்கு அருள்புரிந்து, என்மனத்திருந்த வஞ்சனைகளை அகற்றி

66. : **பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே**

பொருள் : அம்மனத்தைவிட்டு அகலாமல், தங்கியுள்ள கருணை வெள்ளப்பெருக்கே.

67. : **ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே**

பொருள் : தெவிட்டாத அமுதமே அளவற்ற பெருமையுடையவனே

68. : **ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே**

பொருள் : உன்னை உணராதவர்களின் உள்ளத்தில் வெளிப்படாது மறைந்திருக்கும் ஒளியே.

69. : **நீராய் உருக்கி என் ஆருயிராய் நின்றானே**

பொருள் : எளியேனின் வலிய நெஞ்சத்தையும் நீராக உருகச் செய்து என் உயிருக்குத் துணையாக நிற்பவனே

70. : **இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே**

பொருள் : தனக்கென்று இன்ப துன்பங்கள் இல்லாவனே, உயிர்களின் பொருட்டு அவற்றை ஏற்பவனே

71. : **அன்பருக்கு அன்பனே யாவையுமாய் அல்லையுமாம்**

பொருள் : அன்பு செலுத்துவோரிடம் அன்பாக இருப்பவனே, பொருள்கள் எல்லாமாகவும், அவற்றிலிருந்து வேறாகவும் விளங்குகின்ற

72. : **சோதியனே துன் இருளே தோன்றாப் பெருமையனே**

பொருள் : ஒளி வடிவினனே, இருளாகவும் இருப்பவனே, எளிதில் விளங்காத பெருமையுடையவனே

73. : **ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே**

பொருள் : அனைத்திற்கும் முதலாகவும் முடிவாகவும் இடையாகவும் விளங்கி அவையனைத்துக்கும் அப்பாலாகவும் இருப்பவனே.

74. : **ஈர்த்து என்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே**

பொருள் : எளியவனாகிய என்னை உன் கருணையால் கவர்ந்து ஆட்கொண்ட எம் தந்தையாகிய பெருமானே

75. : **கூர்த்த மெய்ஞ்ஞானத்தால் கொண்டுணர்வார்தம் கருத்தின்**

பொருள் : கூர்மையான உண்மையான ஞானத்தால் அன்பு கொண்டு உணர்பவரும், தம் சிந்தையில்

76. : **நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே**

பொருள் : நோக்கியறிதற்கு அரிதானவனே நுண்ணிதான உணர்வாலும் அறிதற்கு அரிய நுட்பமான உணர்வினனே

77. : **போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே**

பொருள் : இறத்தலும் பிறத்தலும் வாழ்தலும் ஆகிய இவையில்லாத புண்ணியவடிவானவனே

78. : **காக்கும் எம் காவலனே காண்பரிய பேரொளியே**

பொருள் : உயிர்கள் அனைத்தையும் காக்கின்ற பாதுகாவலனே, காணுதற்கரிய பேரொளி வடிவானவனே.

79. : **ஆற்று இன்ப வெள்ளமே அத்தா மிக்காய் நின்ற**

பொருள் : ஆற்றைப் போன்று குறையாத வெள்ளப் பெருக்காகிய இன்பமே, மேலாக நிற்பவனே

80. : **தோற்றச் சுடர் ஒளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்**

பொருள் : தோன்றுகின்ற சுடரொளியாக்வும், அளவிட்டுச் சொல்ல முடியாத நுட்பமான உணர்வாகவும்

81. : **மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்**

பொருள் : மாறுபட்ட இவ்வுலகில் பல வகையாகத் தோன்றும் அறிவு வடிவமாகி விளங்கி

82. : **தேற்றனே தேற்றத் தெளிவே என்சிந்தனையுள்**

பொருள் : தெளிவாகவுள்ளவனே, எமக்குத் தெளிவைத் தருபவனே, என் மனத்தில்

83. : **ஊற்று ஆன உண் ஆர் அமுதே உடையானே**

பொருள் : ஊற்றாகிப் பெருகி உண்பதற்கரிய அமுதம் போன்றவனே உயிர்கள் அனைத்தையும் தனக்கு உடைமையாகக் கொண்டவனே

84. : **வேற்றுவிகார விடக்கு உடம்பின் உள்கிடப்ப**

பொருள் : வேறு வேறுவகையான மாற்றங்களுக்கு

உட்படுகின்ற இவ்வுடம்பினுள் அடைபட்டுத் துன்புற்றிருக்க;

85. : **ஆற்றேன் எம் ஐயா அரனேயோ என்று என்று**

பொருள் : எம்தலைவனே என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை இதற்குக் காரணமான வினைகளைப் போக்குபவனே என்று பலவாறு கூவி.

86. : **போற்றிப் புகழ்ந்து இருந்து பொய் கெட்டு மெய்யானார்**

பொருள் : உன்னைப் போற்றிப் புகழ்ந்து உன் நினைவிலேயே இருப்பவர்கள் (உன்னையே தியானித்திருப்பவர்கள்) தம் பாலுள்ள பொய்கள் அனைத்தும் நீங்கி மெய்யான அருள் நிலையை அடைந்து

87. : **மீட்டு இங்கு வவ்து வினைப் பிறவி சாராமே**

பொருள் : மீண்டும் இவ்வுலகில் வந்து வினைக்கீடாகப் பிறவியை அடையாதவாறு

88. : **கள்ளப் புலக் குரம்பைக் கட்டு அழிக்க வல்லானே**

பொருள் : வஞ்சகமான ஐம்புலன்களின் இடமாகிய இவ்வுடம்பாகிய கட்டினை அழிக்க வல்ல பெருமானே

89. : **நம் இருளில் நட்டம் பயின்று ஆடும் நாதனே**

பொருள் : நள்ளிரவில் இடுகாட்டில் நடமாடும் தலைவனே

90. : **தில்லையுள் கூத்தனே தென் பாண்டி நாட்டானே**

பொருள் : தில்லையில் சிற்றம்பலத்தில் கூத்தாடும் பிரானே தெற்கிலுள்ள பாண்டிய நாட்டில் திருவியாடல்களைச் செய்தவனே
(64 திருவிளையாடல்கள்) தென்பாட்டி நாட்டுத் தலைவனே

91. : **அல்லல் பிறவி அறுப்பானே ஓ என்று**

பொருள் : துன்பந்தரும் இப்பிறவியை வேருடன் அறுப்பவனே ஓ என்று கதறி

92. : **சொல்லற்கு அரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்**

பொருள் : சொலற்கரிய பெருமாளை, அவன் பெருமை களைச் சொல்லித்துதித்து; திருவடிகளின் கீழிருந்து

93. : **சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்**

பொருள் : சொல்லப்பட்ட சிவபுராணமாகிய பாட்டின் பொருளை உணர்ந்து சொல்லிப் போற்ற வல்லவர்கள்

94. : **செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவன் அடிக்கீழ்ப்**

பொருள் : ஞானச்செல்வராவர். அத்தகையோர் சிவனின் புரம்) இருப்பிடமான திருக்கயிலையை அடைந்து அங்கு அப்பெருமானின் திருவடிநிழலில்

95. : **பல்லோரும் ஏத்தப் பணிந்து.**

பொருள் : தம்மை எல்லோரும் போற்ற, அப்பெருமானை வணங்கி இன்புற்றிருப்பர். (பேரின்பத்தில் திளைத்திருப்பர்)

திருச்சிற்றம்பலம்

| இறைவனின் நடனத்தலங்கள் | பூசைக்குரிய பத்திரங்கள் |
|---|---|
| 1. ஆனந்த நடனம் - தில்லை, பேரூர் | வில்வம், துளசி, தாமரை |
| 2. அஜபா நடனம் - திருவாரூர் | சண்பகம், மகிழம், அறுகு. |
| 3. சுந்தர நடனம் - மதுரை | நெல்லி, விஷ்ணுகிரந்தி, |
| 4. ஊர்த்துவ நடனம் - திருவாலங்காடு | |
| 5 பிரம நடனம் - திருமுருகன்பூண்டி | |

## சி(சை)வமயம்

கற்காலம் முதல் தற்காலம் வரை மனிதன் இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழன் மூலம் பல்வேறு மாற்றங்கள் அடைந்து முன்னேறிக் கொண்டு வருகின்றான். பல நாடுகளில் வாழும் மக்கள் மதம் சமயம் சார்ந்து நாகரீக மனிதர்களாக வாழ்ந்து வருகின்றனர். சமயம் என்பது பக்குவப்படுத்துவது என்பது பொருள். அது அறநெறி வழிகளைக் குறிக்கும். மதம் என்பது சமயத்தின் கொள்கைகளை விவரித்து கூறுவாகும். சைவத்தின் நான்கு பகுதிகளான சரியை, கிரியை, யோகம், ஞானம் முறையே தொண்டு, மகன்மை, தோழமை மற்றும் குரு சீடர் ஆகிய நெறிகளாக அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் வாழந்து காட்டினார்கள்.

சிவபெருமானை முழுமுதற்கடவுளாக சார்ந்திருப்பது சைவம் ஆகும். கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே சிவ வழிபாடு இருந்து வந்ததாக திருமூலர் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய பழமை வாய்ந்ததாக் கருதப்படுகின்றது. ஆரியர்கள் இந்தியாவிற்குள் நுழைவதற்கு முன்பு சிவவழிபாடு இருந்து வருகிறது. சிவலிங்கம் என்பது லிங்கம் சிவனாகவும், என்றும் பிரிக்க முடியாத அதன் பீடம் சக்தியாகவும் இணைந்து வழிபட்டு வந்தனர். பிற்காலத்தில் சக்தியை வழிபடும் சாக்தம், கணபதியை வழிபடும் காணாபத்யம், முருகனை வழிபடும் கௌமரம், திருமாலை வழிபடும் வைணவம் தோன்றியது. அனைத்து வழிபடும் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எனப்படும் ஐம்பூதங்களை அடிப்படையாகக் கொண்ட சிவவழிபாட்டினுள் அடங்கியவையே ஆகும்.

சிவ வழிபாட்டில் அன்பே சிவமாக போற்றி வந்தனர். அதன் வழி வந்தவர்கள் சைவ சமயத்தினராக திகழ்ந்தனர்.

இதனை

அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவதாரும் அறிகிலார்
அன்பே சிவமாவதாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே

என்று திருமூலரின் திருமந்திரப் பாடல் எடுத்துக் கூறுகின்றது. எல்லா உயிர்களும் சமமாக மதித்து ஜீவகாருண்யம் என்ற கொல்லாமை தத்துவத்தை உணர்த்தியவர் வள்ளலார். அன்பு அறத்திற்கு மட்டுமல்லாமல் மறம் எனும் பாவத்தை நீக்குவதற்கும் துணையாக இருக்கும் என்ற பொருளை வான் புகழ் வள்ளுவனின் பின்வரும் குறள் உணர்த்துகின்றது.

அறத்திற்கும் அன்பு சார்ந்த என்பதறியார்
மறத்திற்கும் அஃதே துணை

இறைவன் படைத்த ஐம்புலன்கள் மூலம் கன்மம், மாயை, ஆணவம் ஆகிய மும்மலங்களையும் அழித்து மீண்டும் இறைவனைச் சேர்வதே உன்னத உயிர் வாழ்க்கை. சைவ மதம் யாவருக்கும் சமம். சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டது போல சமண மதத்தவரையும் சேர்த்துக் கொண்டது. தொண்டுள்ளம் கொண்ட மனித நேயத்தை வளர்ப்பதே சைவ சமயம். மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்பது திருமூலரின் கருத்து.

இன்றைய உலகில் அதிவேக வாழ்க்கையில் அல்லல்படும் மக்களுக்கு மன அமைதியுடன் மகிழ்ச்சியாக வாழ இன்றியமையாதது சைவ சமயமாகும் என்பதில் ஐயமில்லை.

# பஞ்ச புராணம்

ஆலயங்களில் இறைவன் பூசைக்குப் பிறகு இறைவனைப் போற்றி பாமாலையாக புகழாரம் சூட்டுவது பஞ்சபுராணப் பாக்கள் அவை :

1. தேவாரம் - இறைவனைப் புகழும் பாமாலை

2. திருவிசைப்பா - இறைவன் மீது பக்தியுடன் பாடிய இசைப் பாடல்கள்.

3. திருவாசகம் - சிவபெருமானைப் பொருளாக வைத்து பாடிய மாணிக்கவாசகரின் பாமாலை.

4. திருப்பல்லாண்டு - நடராஜபெருமானை பல்லாண்டு வாழ்த்திப் பாடிய பாடல்கள்.

5. பெரிய புராணம் - திருத்தொண்டர் புராணம் சேக்கிழார் பாடிய பாடல்கள்.

மேற்படி பாடல்கள் கோயில்களில் நாள், கிழமை, வாரம், மாதம் ஆகியவற்றில் வரும் புண்ணிய நாட்களில் பாராயணம் செய்து மகிழ்வர். அவை நில ஒளிபடி வளர்பிறை தேய்பிறை ஒட்டி வரும் நாட்களை சமய சார்பான வாழ்க்கைக்கு உரியனவாகக் கருதப்படும். திங்கட்கிழமை சிவனுக்கும், செவ்வாய்க்கிழமை முருகனுக்கும், சனிக்கிழமை திருமாலுக்கும் உரிய நாட்களாகும். வளர்பிறை சதுர்த்தி விநாயகருக்கும், சஷ்டி முருகனுக்கும் தேய்பிறை நவமி கண்ணனுக்கும், வளர்பிறை நவமி இராமனுக்கும் தசமி தேவிக்கும், ஏகாதசி திருமாலுக்கும் உகந்ததாகும்.

மாதங்களில் ஆவணி வளர்பிறை சதுர்த்தி விநாயக சதுர்த்தியாகவும் ஆவணி தேய்பிறை அஷ்டமி கோகுலாஷ்டமியாகவும், புரட்டாசி அமாவாசைக்குப்பின்

ஒன்பது நாட்கள் மலை மகள், கலை மகள், திருமகளுக்கும் ஒன்பது நாளும் பத்தாம் நாள் நவமி அன்று தொழிற்கருவிகளை தேவியின் முன் வைத்து ஆயுதபூசையாகவும், ஐப்பசி வளர்பிறை பிரதமையிலிருந்து ஆறு நாட்கள் முருகனுக்கு சஷ்டி உற்சவமாகவும், சித்திரை வளர்பிறை புனர்பூச நட்சத்திரத்தில் நவமியை இராம நவமியாகவும், மார்கழி வளர்பிறையில் வரும் ஏகாதசி வைகுண்ட ஏகாதசியாகவும், கார்த்திகை மாதம் கிருத்திகை நட்சத்திரத்தில் கார்த்திகை தீபமாகவும், மார்கழி திருவாதிரை நட்சத்திரத்தில் சிவனுக்கு திருவாதிரை விழாவாகவும் மக்கள் இறைவனை போற்றி மகிழ்கின்றனர்.

### இறைவன்

இறைவனை ஐம்புலனுக்கப்பால் உணர்தல் வேண்டும். இறைவனைக் காண சரணடைதல் தவிர வேறேதுமில்லை. அவையாவன.

1. ஸ்ரவணம் - இறைவனைக் கேட்டல்
2. கீர்த்தனம் - இறைவன் புகழ் பாடுதல்
3. ஸ்மரணம் - இறைவனை நினைத்தல்
4. பாதசேவனம் - இறைவனுக்கு பாதசேவை
5. அர்ச்சனம் - இறைவனை வழிபடுதல்
6. தாஸ்யம் இறைவனுக்கு சேவகனாக சேவை செய்தல்
7. ஸக்கியம் - இறைவனுடன் நட்பு கொள்ளல்
8. ஆத்ம நிவேதனம் - இறைவனிடம் முழு சரணாகதி

சைவ சமயத்தில் நால்வர் வழிகாட்டிய நெறிகள்

உடல், உயிர் ஆன்மா ஆகியவற்றில் அழிக்க முடியாதது ஆன்மா என்ற இறைவன் நன்மை தீமை புகழ்ச்சி இகழ்ச்சி உயர்வு தாழ்வு ஆகியவைகளை பகுத்து அறிபவனே மேன்மை அடைந்து இறைவனைக் காண முடியும்.

## வாரியாரின் பொன்மொழிகள்

1. முருகபிரானின் வேல் ஞானத்தைக் குறிக்கின்றது. அது அறிவானது ஆழம், அகலம், கூர்மை என்ற இலக்கணத்தைக் குறிக்கின்றது.
2. விநாயகர் சிவத்துள் யாவையும் பார்த்தார். முருகன் யாவற்றினுள் சிவனைப் பார்த்தார். விநாயகர் சிவனை வலம் வந்தார். முருகன் உலகை வலம் வந்தார்.
3. அயனும் மாலும் சிவனின் அடிமுடி தேடினார்கள். அவர்கள் திருமகளுக்கும் கலைமகளுக்கும் நாயகர்கள் செல்வச் செருக்காலும் கல்வி முருக்காலும் கடவுளைக் காண முடியாது என்பது நுண் பொருள்.
4. தேங்காய் பச்சை மட்டை மாயமலம்; நார்கள் - கன்ம மலம்

   வெண்மையான பருப்பு - சுத்த சத்துவ சித்தமாகும்.
5. மந்திரத்தில் ஓம் என்ற பிரணவத்தை சேர்த்தால் பயன்கள் மேலும் கூடும்.
6. அரிஅம்மையும், அரன்அப்பனையும் குறிக்கும். அரிஓம் என்பதில் அரி சக்தியையும் ஓம் என்பது சிவத்தையும் குறிக்கும்.
7. நெருப்பு - சிவன், சூடு - அம்பிகை, வண்ணம் - விநாயகர், ஒளி - முருகன்
8. ஆன்மீகம் ஆன்மாவைப் பற்றியது. லௌகீகம் உலகைப் பற்றியது. இரண்டும் வாழ்வில் உடலும் உயிரும்போல் பின்னி வாழ்தல் வேண்டும்.
9. ஆத்திகனோ நாத்திகனோ அறநெறியுடன் வள்ளுவன் காட்டிய நல்வழியில் நடக்க வேண்டும்.

## சமுதாய எழுச்சிக்கு

## வேதாத்ரி மகிரிஷியின் பொன்மொழிகள்

ஆக்கத்துறையில் அறிவை செலுத்து - ஊக்கமுடன்
உழை - உயர்வு நிச்சயம்.

ஈசனே தானாக உணர்ந்த போதும் எழும் பசியை
உணவால்தான் போக்க வேண்டும்

அறிவை உணர்ச்சி வெல்லுவது இயல்பு
அறிவால் உணர்ச்சியை வெல்லுவது உயர்வு

பறை ஒளியால் சங்கீதம் பயனற்று காண்பதைப் போல்
குறை காண்போர் அறிவில் நற்குணங்கள் பயனற்றிருக்கும்

வாழத்தெரியாதோர் பெரும்பாலோர் வாழ்நாட்டில்
ஆளத்தெரியாதோர் ஆட்சியே நடைபெறும்

மரத்தினிலே விதையும் அந்த வித்தினிலே மரம்போல்
மனிதனுக்குள் தெய்வம் அந்த தெய்வத்திற்குள்
மனிதனாம்.

உணவில் எளிமை, உழைப்பில் கடுமை,
ஒழுக்கத்தில் உயர்வு - உத்தமர் இயல்பு.

மற்றவரை எதிர்பார்த்தல் கையேந்தல் வேண்டாம்
மாநிதியாம் இறைவனை நம் மனத்தடியில் தேர்வோம்

ஒரு பிடி உணவில் ஒற்றுமை கண்டிடு
உழைப்பினால் பதில் உலகுக்குத் தந்திடு.

இயற்கை சக்தியே விதி
இதை யறிந்த அளவே மதி

உடையில் ஒழுக்கம், உள்ளத்தில் கருணை,
நடையில் கண்ணியம் - நல்லோர் பண்பு

குற்றவாளி பாவியென்று யாருமில்லை உலகில்
குறைகளுக்கு காரணமோ பழைய சமுதாயம்.

உள்ளதை உணர்வோம். அல்லதை விடுவோம்
நல்லதை செய்வோம். வளமுடன் வாழ்வோம்.

எண்ணியவெல்லாம் எண்ணியபடியே ஆகும்
எண்ணத்தில் உறுதியும் ஒழுங்கும் அமைந்திடில்.

உள்ளொன்று வைத்து புறம் ஒன்று பேசினால்
உள்ளொளி தீயாகி உடலை கெடுத்து விடும்.

குறிதவறி துப்பாக்கி வெடிப்பதை ஒக்கும்
நெறி தவறி செய்யும் செயலின் விளைவு.

வாங்கும் கடனும், தேங்கும் பணமும் வளர வளர
வாழ்வைக் கெடுக்கும்.

உண்ணும் உணவு உடல் மட்டும் பாயும்
எண்ணும் எண்ணம் எங்கும் பாயும்.

உனக்கும் நல்லதாய் ஊருக்கும் நல்லதாய்
நினைப்பதும் செய்வதும் நித்தியக்கடன்.

செயலிலே விளைவாக தெய்வ ஒழுங்கமைப்பிருக்கப்
பயனென்ன தவறிழைத்துப் பரமனைப் பின்வேண்டுவதால்.

உண்மையில் எதிரி உனக்கு உண்டு எனில்
உள்ளத்திலெழும் ஒழுங்கற்ற எண்ணமே.

கடவுளை வணங்கும்போது கருத்தினை உற்றுப்பார் நீ
கடவுளாய் கருத்தே நிற்கும் காட்சியைக் காண்பாய் அங்கே

விதைத்தவன் உறங்கி விடுகிறான் - விதைகள் உறங்குவதில்லை
எண்ணியவன் உறங்கி விடுகிறான் - எண்ணங்கள்
உறங்குவதில்லை

# நன்மனச் செம்மல் சி.நடராஜ முதலியார்
# நூற்றாண்டு விழா அழைப்பிதழ்

அன்புடையீர்,

வணக்கம், நிகழும் சர்வதாரி ஆண்டு புரட்டாசித் திங்கள் 17-ஆம் நாள் வெள்ளிக்கிழமை 03-10-2008 மாலை 5.30 மணி அளவில் சென்னை - 14, இராயப்பேட்டை, எண்,9/5, டி.டி.கே. சாலையில் அமைந்துள்ள ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை - திரு.வி.க. மணி மண்டபத்தில், சபையின் முன்னாள் தலைவரும், புகழ்வாய்ந்த வழக்கறிஞரும், சீரிய சமுதாயத் தொண்டரும் ஆகிய நன்மனச்செம்மல் சி.நடராஜ முதலியார் நூற்றாண்டு விழா நடைபெறும்.

விழாவிற்கு பிரபல தொழிலதிபரும்,
சைவ சித்தாந்தப் பெருமன்ற முன்னாள் தலைவரும்,
ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையின் துணைத்தலைவரும் ஆகிய
பொறியாளர் **திரு. எஸ்.தியாகராஜன்** அவர்கள்
தலைமையேற்கவும்,

தமிழ்நாடு அரசு கனிமவள நிறுவன முன்னாள் தலைவர்
**திரு. டாக்டர் எஸ்.சரவணன்** அவர்கள்
நூற்றாண்டு விழா நாயகரின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்து
சிறப்புரை ஆற்றவும் இசைந்துள்ளார்கள்.

சபையின் சார்பாக திருவுருவப் படத்தை சபைத்தலைவர்
**திரு. அ.கணேசன்** அவர்கள்
பெற்றுக்கொள்வார்கள்.

நூற்றாண்டு விழா மலரை
செங்குந்த மகாஜன சங்க துணைத்தலைவர் பெருமைமிகு
**திரு. எம்.எம்.தணிகைமலை** அவர்கள்
வெளியிடவும்,

முதல் பிரதியைப் பெற்றுக்கொள்ள
**டாக்டர். எம்.எஸ். ராமசந்திரன்** அவர்கள்
இசைந்துள்ளார்கள்.

நூற்றாண்டு விழாவிற்கு அன்பர்கள் வருகை தந்து
சிறப்பிக்க வேண்டுகிறோம்.

இங்ஙனம்

**சி.ந.விஸ்வநாதன் - புஷ்பா விஸ்வநாதன்**
**சி.ந.சொக்கநாதன் - இராஜேஸ்வரி சொக்கநாதன்**
**சி.ந.சிவகுமார் - விமலா சிவகுமார்**
**சி.ந.இரவீந்திரன் - மாலினி இரவீந்திரன்**

## நிகழ்ச்சி நிரல்

**3-10-2008 வெள்ளிக்கிழமை**

| | | |
|---|---|---|
| *மாலை 4.30 - 5.30 மணி* | : | *சிறப்பு வழிபாடு மற்றும் பக்தி பாடல் இசை பண்ணிசைவாணி வள்ளிஉமாபதி* |

**மாலை 6.00 மணியளவில்**

| | | |
|---|---|---|
| *இறை வணக்கம்* | : | *சிநேகா, நவீனா, சரண்யா (கொள்ளு பெயர்த்திகள்)* |
| *வரவேற்புரை* | : | *திரு. சி.ந.விஸ்வநாதன்* |
| *தலைமையுரை* | : | *பொறியாளர் திரு. எஸ்.தியாகராஜன்* |
| *திருவுருவப்படத் திறப்பும் சிறப்புரையும்* | : | *டாக்டர் ச.சரவணன்* |
| *திருஉருவப்படத்தைப் பெற்றுக்கொள்பவர்* | : | *சபைத் தலைவர் திரு. அ.கணேசன்* |
| *நூல் வெளியீடு* | : | *திரு. எம்.எம்.தணிகைமலை* |
| *முதற்படி பெறுபவர்* | : | *டாக்டர். எம்.எஸ். ராமசந்திரன்* |
| *நன்றியுரை* | : | *டாக்டர் சி.ந. சொக்கநாதன்* |
| *இறை வாழ்த்து* | : | *திரு. சி.கி. சச்சிதாநந்தன்* |
| *நிகழ்ச்சி இணைப்பாளர்* | : | *டாக்டர் அ.நாகலிங்கம்* |

*மாலை 5.30 மணியளவில் தேநீர்*

# தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

## நன்மனச் செம்மல் சி. நடராஜ முதலியார் நூற்றாண்டு விழா அழைப்பிதழ்

அன்புடையீர்,

வணக்கம். நிகழும் 21-11-2008 வெள்ளிக்கிழமை மாலை 5.00 மணியளவில் சென்னை, மைலாப்பூர், கிழக்கு மாடவீதியில் உள்ள பாரதிய வித்யா பவன் அரங்கத்தில் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் முன்னாள் து:ணைத் தலைவரும், செயலாளரும், 'செங்குந்த மித்திரன்' மாத இதழின் கௌரவ ஆசிரியரும், சிறந்த சமுதாயத் தொண்டரும், வழக்கறிஞருமான நன்மனச் செம்மல் சி. நடராஜ முதலியார் அவர்களின் நூற்றாண்டு விழா சிறப்பாக நடைபெறவுள்ளது.

இவ்விழாவிற்கு,
தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர்
**திரு. ஜெ. சுத்தானந்தன் அவர்கள்**
தலைமையேற்கவும்,

உச்சநீதிமன்ற மாண்பமை நீதியரசர்
**திரு. எஸ். நடராஜன் அவர்கள்**
மலர் வெளியிட்டு சிறப்புரையாற்றவும்

உயர்நீதிமன்ற மாண்பமை நீதியரசர்
**திரு. எஸ். ஜெகதீசன் அவர்கள்**
**சி. நடராஜ முதலியார்** அவர்களின் திருவுருவப் படத்தை திறந்து வைத்து விழா பேருரையாற்றவும்,
மற்றும்

சமுதாயச் சான்றோர்கள் வாழ்த்துரை வழங்கவும் அன்புடன் இசைந்துள்ளார்கள். அனைவரும் விழாவில் கலந்து கொண்டு சிறப்பிக்குமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

| ஜெ. சுத்தானந்தன் | டி.எஸ். புருஷோத்தமன் | எம்.எஸ். ரெங்கையா |
|---|---|---|
| தலைவர் | பொதுச்செயலாளர் (பொறுப்பு) | பொருளாளர் |

# நிகழ்ச்சி நிரல்

மாலை 5.00 மணிக்கு

இறைவணக்கம்

வரவேற்புரை : **திரு. டி.எஸ். புருஷோத்தமன்** அவர்கள்
பொதுச் செயலாளர் (பொறுப்பு),
தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

தலைமையுரை : **திரு. ஜெ. சுத்தானந்தன்** அவர்கள்
தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

மலர் வெளியிட்டு
சிறப்புரை : மாண்பமை நீதியரசர்
**திரு. எஸ். நடராஜன்** அவர்கள்

திருவுருவப்படத்தைத்
திறந்து வைத்து
விழா பேருரை : மாண்பமை நீதியரசர்
**திரு. எஸ். ஜெகதீசன்** அவர்கள்

சி.என். நினைவாக
சங்கத்திற்கு
நீதியளித்தல் : **திரு. சி.என். விஸ்வநாதன்** அவர்கள்

வாழ்த்துரை : **திரு. எம்.எம். தணிகைமலை** அவர்கள்
துணைத் தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

**திரு. எம்.எஸ். ரெங்கையா** அவர்கள்
பொருளாளர், தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

**திரு. எம்.பி. பாண்டுரங்கன்** அவர்கள்
முன்னாள் தலைவர்,
சமுதாய பொருளாதார தொண்டு மன்றம்

ஏற்புரை : **திரு. சி.என். சிவக்குமார்** அவர்கள்

நன்றியுரை : **திரு. கே.எஸ். செல்வராஜ்** அவர்கள்
துணைப் பொதுச் செயலாளர்,
தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கம்

நாட்டுப்பண்

# சி. நடராஜ முதலியாரின் வாழக்கைக் குறிப்பு

❖ 03-11-1907ல் காங்சிபுரம் சின்னகுழந்தை முதலியார் - கல்யாணியம்மாள் தம்பதியருக்கு மூன்றாவது மகனாகப் பிறந்தார்.

❖ 1928 ஆம் ஆண்டு பேரறிஞர் அண்ணா அவர்களுடன் B.A. படித்தார்.

❖ 1932ல் செங்குந்தர் குல முதல் வழக்கறிஞராக பதிவு செய்து, மகாத்மா காந்தியின் வழக்கறிஞரான கே. பாஷ்யம் அவர்களிடம் பணியாற்றினார்.

❖ மகன்கள் ஐந்து பேர் :

சி.என். விஸ்நாதன் M.A.B.L.,D.S.S.,
டாக்டர் சி.என். சொக்கநாதன் M.B.B.S.,
சி.என். சிவக்குமார் B.A.B.L.,
அமரர் சி.என். நமசிவாயன் D.E.E.,
டாக்டர் சி.என். ரவீந்திரன் M.D.,

❖ 1937ல் நடைபெற்ற இரண்டாவது தென்னிந்திய செங்குந்தர் மாநாட்டு இளைஞர் அணி செயலாளராக சேவை செய்தார்.

❖ 1940ல் செங்குந்தர் சமுதாயத்தை பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் இருந்து நீக்கியபோது மீண்டும் இடம் பெறச் செய்ய கடும் முயற்சியை மேற்கொண்டார்.

❖ பத்மஸ்ரீ M.P. நாச்சிமுத்து அவர்களுடன் இணைந்து நம் குல மக்களுக்கு பெரும் தொண்டாற்றினார்.

❖ மதராஸ் மாநில கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்க வழக்கறிஞராக பணியாற்றினார்.

❖ 17-03-1945ல் ஈரோடு ஐயா S. மீனாட்சி சுந்தரனார் தலைமையில் நடைபெற்ற முதல் ஜில்லா மாநாட்டில் "நன்மனச் சான்றோர்" என்ற பட்டம் வழங்கப்பட்டது.

❖ சங்கத்தின் செயலாளராகவும், துணைத் தலைவராகவும், செங்குந்த மித்திரன் மாத இதழின் கௌரவ ஆசிரியராகவும் சுமார் 30 ஆண்டுகள் சேவை செய்தார்.

❖ மதராஸ் பாளையகாட் கம்பெனியாரின் உதவியுடன் சென்னை அரண்மனைக்காரன் தெருவில் செங்குந்தர் மாளிகை கட்டிடம் வாங்க பெரிதும் பாடுபட்டார்.

❖ 1983 ஆம் ஆண்டு தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் புரவலராக கௌரவிக்கப்பட்டார்.

❖ 04-02-1984 அன்று காஞ்சிபுரத்தில் பத்மஸ்ரீ M.P.N. அவர்கள் தலைமையில் நடைபெற்ற 14வது மாநாட்டின் துணைத் தலைவராக சிறப்புடன் செயலாற்றினார்.

❖ தம் 77-ஆம் வயதில் 18-04-1984 அன்று இறைவன் திருவடியடைந்ததார்.

## எந்தைக்குக் கவிதாஞ்சலி

எந்தை சி. நடராஜனுக்குக்
        கொண்டாடுகிறோம் நூற்றாண்டு
சிந்தையில் ஊறும் தேன்தீந்தமிழில்
        பாடுகின்றேன் பல்லாண்டு
பொதிகையில் அமர்ந்து
        பைந்தமிழ் வளர்த்தான் குறுமுனி
எம்மனதினில் அமர்ந்து
        பண்பை வளர்த்த நீ என் இதயக்கனி

நீவீர் எடுத்த வழக்குகளில்
        என்றும் தோற்றதில்லை
நியாயம் இல்லா வழக்குகளை
        எப்போதும் தொட்டதில்லை
செங்குந்தர் இனம் சிறக்க
        மனம் நாடினார்
நற்றலைவனாய் இருந்து
        நல்வழி காட்டினார்

செங்குந்தர் இனம் உள்ளவரை
        மறந்திடுமோ இந்தத் தலைவரை
அவர் வகுத்தத் தொண்டு முறை
        தொடர்ந்து நடத்திட உளர் இங்கு கோடி வரை
தந்தையாய் நீ அமைந்தது
        நாங்கள் பெற்ற பெருவரம்
நெஞ்சம் ததும்பிய நன்றியால்
        நெகிழ்கிறது மனம்
        தாழ்கிறது சிரம்
        குவிகிறது கரம்

நன்றி வணக்கம்
மாலினி ரவீந்திரன் (மருமகள்)



உருவாய் அருவாய் உலதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே

அருணகிரிநாதர்